KALKI 17.3.96
ரூ. 3.00

# கல்கி

புதிய ஃபார்முலா:

ஒரு கப்... +
ஒரு கப்...



ஐடியா ஸ்பெஷல்!



# T.S.S. NIDHI LTD.

ESTD 1973

## THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Off.: 230, R.K. Mutt Road, Mylapore, Madras - 600 004 Ph.4942303/4943365

| BRANCHES | | |
|---|---|---|
| | THIRUVANMIYUR | : 112, Thiruvalluvar Salai, Kamaraj Nagar, Madras-41 Ph. 410058 |
| | TONDIARPET | : 667, T.H.Road, Madras-81 Ph.5950472 |
| | SAIDAPET | : 11, Jones Road, Madras, -15 Ph.4851468 |

## FIXED DEPOSIT SCHEME

| Period (Months) | 12 | 24 | 36 | 60 |
|---|---|---|---|---|
| Rate of Int. P.A. | 17% | 18% | 19% | 20% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan) For Deposit of **Rs.1,000/-**

| Period (Months) | 12 | 24 | 36 | 45 | 67 |
|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1190 | 1425 | 1760 | 2025 | 3025 |

Minimum Deposit **Rs.10,000/-**

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME

Period **12 Months**

| Interest payable Monthly | **19.5%** p.a | Interest payable Annually | **21%** p.a |
|---|---|---|---|

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS)

## T.S.S. SPECIAL DEPOSIT SCHEME

For Deposit of Rs.10,000/-

| Period (Months) | Maturity Value |
|---|---|
| 120 | Rs.66,000 |
| 180 | Rs.1,82,000 |

## RECURRING DEPOSIT SCHEME

### MONTHLY DEPOSIT RS.100/-

| Period in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Week Days | | Sunday | Holiday |
|---|---|---|---|---|
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

## HIGHLIGHTS

* Recognised as a NIDHI COMPANY by Central Government of India.
* Company is in 23rd year of service.
* Transaction with members only. (Rupees two only for membership)
* Premature repayment facility as per terms and conditions.
* Monthly interest Warrants would be despatched in advance for the year of Deposits.

## LOANS

A) Jewel loans granted on Gold ornaments at Rs.300/- per gm. (Rs.2400/- per 8 gms.)

* No Ceiling
* No Charges
* No Interest Tax
* Recurring Deposit not required
* Your Jewels are insured at our cost.

B) Property Mortgage Loans granted on RD basis within Madras city limits.

P.S. SAMBASIVAM, Secretary

G.KUMARAVELU, Vice-President

K.R.V. RAMANI, President

# கல்கி

ஏப்ரல் 14ம்

தமிழ்ப் புத்தாண்டுச்
சிறப்பிதழில்...

மேலாண்மை
பொன்னுச்சாமி
எழுதும்

புதிய
தொடர்

# ஆகாயச் சிறகுகள்

# அசத்தல் ஐடியா... அமோக பிஸினஸ்!

பெங்களூர் மகாத்மா காந்தி சாலையில், 'பார்ட்டன் சென்டர்'. மூன்றாவது மாடியில் அழகான அலுவலகம் ஒன்றில், கம்ப்யூட்டர் ரிப்போர்ட்டில் கவனமாக இருக்கும், சற்றே பருமனான வினோத் சாப்ராவைச் சந்திக்கிறோம்.

எத்தனையோ இந்தியத் தொழிலதிபர்கள், அமெரிக்காவில் தங்கள் பொருள்களை விற்க வழி இருக்கிறதா என்று தலையைப் பிய்த்துக் கொண்டிருக்கிறார்கள்; அதே போல், சேஷனுக்கு அடுத்தபடி பிரபலமாயிருக்கும் 'குளோபலைசேஷன்' காரணமாக, நிறைய அமெரிக்கத் தயாரிப்பாளர்கள், இந்தியாவில் தங்கள் பொருட்களுக்கு மார்க்கெட் கிடைக்குமா என்று கையைப் பிசைந்து கொண்டிருக்கிறார்கள். மார்க்கெட் கிடைத்தாலும் விளம்பரம், வர்த்தகத் தொடர்புப் பணிகள், சட்டதிட்டங்கள், அதிகாரவர்க்க கெடுபிடிகள் என்று செலவுகள், தொல்லைகள்.

ஓர் இணைப்பு ஏற்படுத்தி இந்தத் தொல்லைகளைக் குறைக்க முடியுமா?

இருந்தது ஐடியா வினோத் சாப்ராவிடம்.

பிறந்தது: 'ஏஷியா அமெரிக்கா மார்க்கெட்டிங்...'

"எப்படி இந்தியாவையும் அமெரிக்காவையும் இணைக்கிறீர்கள்? ஓர் உதாரணம் சொல்லுங்களேன்!"

"ஃப்ளாரிடாவில் உள்ள ஒகலாவில் இருந்தபோது பால் வைட்டிங் என்பவர் ஒரு நாள் வந்து, தாம் ஒரு பேனாவைக் கண்டு பிடித்திருப்பதாகச் சொன்னார். ஏராளமான போலி கரன்சிகள் புழங்க ஆரம்பித்திருக்கிற இந்த நாளில், இது உலகம் முழுவதிலும் உள்ள வங்கிகளிலும், வியாபார நிறுவனங்களிலும் மிகவும் பயன்படும் என்றார். உண்மையான கரன்சி நோட்டில் இதால் ஒரு கோடு போட்டால் ஒன்றுமே தெரியாது. போலி நோட்டில் மட்டும் பிரவுன் நிறக் கோடு தெரியும். இதை இந்தியாவில் விற்க, 'டெஸ்ட் மார்க்கெட்டிங்' செய்தேன். வெற்றி கிடைத்தது. இப்போது ஏற்றுமதி, இறக்குமதி ஃபார்மாலிடிகளை நாங்களே பார்த்துக் கொள்கிறோம். இதைக் கண்டுபிடித்த பால் வைட்டிங் என்ன செய்வது என்று விழித்துக் கொண்டு அமெரிக்காவில் உட்கார்ந்திருந்தால் இது நடந்திருக்குமா?" என்றார் லிண்டா.

வினோத் சாப்ராவின் மனைவி லிண்டா சாப்ரா அமெரிக்கர்; ஃப்ளாரிடாவில் உள்ள ஒகலாவில் இருக்கிறார்.

"நான் இங்கேயும், லிண்டா ஒகலாவிலும் இருந்து கொண்டு இரு பக்கத்து ஏற்றுமதி - இறக்குமதிக்கும் உதவுகிறோம்" என்கிறார் வினோத்.

விளம்பரம், புரோஷர்கள், வீடியோ பிரசன்டேஷன் எல்லாம் கூட இவர்களே பார்த்துக் கொள்ளுகிறார்களாம்.

"ஒரு புதிய பொருளை மார்க்கெட்டில் அறிமுகப்படுத்தவே ஏராளமாகச் செலவு ஆகுமே?"

தமக்கு வந்த சமீபத்திய டெலிபோன், ஃபேக்ஸ் பில்களை எடுத்துக் காட்டினார் சாப்ரா. அது பாட்டுக்குப் பக்கம் பக்கமாய்த் தொடர்கிறது. டோட்டல், தலைசுற்ற வைக்கும்!

இந்தச் செலவுகளுக்கு எல்லாமாகச் சேர்த்து 8000 ரூபாய் வாங்கிக் கொள்கிறார். பிறகு வியாபாரம் படிந்தவுடன் 2 முதல் 10 சதவிகித சர்வீஸ் சார்ஜ் அடிப்படையில் ஒப்பந்தம் செய்து கொள்கிறார்.

கோல்ஃப் விளையாட்டு உபகரணங்களுக்கான பாகங்கள் தயாராகி, பெங்களூரில் வந்து இறங்கிவிட, அங்கே கம்ப்யூட்டர் புரோக்ராம்படி, 'அசெம்பிளி' மட்டும் பண்ணுகிறார்கள். எனவே அப்பட்டமாக அமெரிக்கத்தரம் வாய்ந்ததாக இருக்கிறது. இந்தியாவில் இப்போது வளர்ந்து வரும் கோல்ஃப் ஆட்டங்களுக்கு நிறையவே உபகரணங்கள் தேவைப்படுகின்றன.

"இந்த ஐடியாவைக் கொடுத்து என் மனைவிதான்!" என்கிறார் வினோத் சாப்ரா.

வினோத் சாப்ராவும், லிண்டாவும் திருமணம் செய்து கொண்டதே ஒரு குட்டிக்கதை. எட்டாம் வகுப்புப் படிக்கும் போது யாரைப் பேனா நண்பியாக ஏற்று, கடிதங்கள் எழுதினாரோ, அவரையே ஒரு பத்திரிகையாளர் கூட்டத்தில் சந்தித்தார் வினோத். லிண்டா, 'ஃப்ளாரிடா மாகசீன்'

இதழின் உரிமையாளர் - ஆசிரியர். ஏற்கெனவே ஓர் அமெரிக்கப் பெண்ணை மணந்து டிவோர்ஸ் செய்திருந்த வினோத், லிண்டாவைத் திருமணம் செய்து கொண்டார். "லிண்டா மார்க்ஸ், லிண்டா சாப்ரா ஆன கதை இது தான்!" என்றார் லிண்டா.

வினோத் சாப்ராவும் பெரிய பத்திரிகையாளர். ஊட்டியில் படிப்பு முடிந்ததும், சென்னை தாம்பரம் கிறிஸ்தவக் கல்லூரியில் ஒருவருடம் படித்திருக்கிறார். பிறகு வடக்கே டிகிரி. ("வடக்கு எனக்குப் பிடிக்கவில்லை. ஊட்டிக்கே திரும்பிவிட்டேன்" என்கிறார்.)

பத்தொன்பது வயதிலேயே 'நீல்கிரி ஹெரால்ட்' பத்திரிகையை ஆரம்பித்து, அப்போது கலெக்டராயிருந்தவரின் ஊழல்களை வெட்ட வெளிச்சமாக்கிய துணிச்சல்காரர்.

"இதோ பார்! நீயும் பஞ்சாபி, நானும் பஞ்சாபி. எதற்கு வம்பு? உனக்கு வேண்டிய வசதிகள் எல்லாம் செய்து தருகிறேன். நியூஸ்பிரின்ட் தருகிறேன். பணம் தருகிறேன். என் வழியை விட்டு ஒதுங்கிவிடு!" என்றாராம் கலெக்டர். வினோத் சாப்ரா ஒதுங்கவில்லை. 'ஹிந்து'வில் நிறைய எழுத ஆரம்பித்தார். 1970ல் யுனைடெட் பிரஸ் இன்டர்நேஷனல் செய்தி நிறுவனம் செய்த விளம்பரத்தைப் பார்த்து விண்ணப்பம் போட்டார். பிரஸ்ஸல்ஸ் நாட்டில் வேலை கிடைத்தது!

"என்னையும் வியத்நாம் போருக்குப் போகச் சொன்னார்கள். போக மாட்டேன் என்று அமெரிக்க அரசை எதிர்த்து, சட்டரீதியாகப் போராடி வெற்றி பெற்றேன். வேலை தேடி அல்பனி நகரில் ஹெர்ஸ்ட் பப்ளிகேஷன்ஸ் நிறுவனத்தின் பிரம்மாண்டமான கட்டடத்தின் வாசலில் சும்மா நின்று கொண்டிருந்தேன். வழி தவறிய இந்திய டூரிஸ்ட் என்று நினைத்த ஒரு பெரியவர், விசாரித்தார் - என்ன வேண்டும் என்று. 'வேலை!' என்றேன். என் ஆர்வத்தைப் புரிந்து கொண்டு, உடனே காபி-எடிட்டராக வேலை கொடுத்துவிட்டார். அவர்தான் பத்திரிகை வெளியீட்டாளர்."

சாப்பாட்டு ரசிகரான வினோத், எல்லா ரெஸ்டாரன்ட்டுகளிலும் போய்ச் சாப்பிட்டுவிட்டு வந்து உணவு வகைகள் பற்றி எழுத ஆரம்பித்தார். பிறகு தாமே சமைக்கவும் ஆரம்பித்தார். பிரஞ்சு உணவு, இதாலி உணவு என்று அவர் எழுதிய கட்டுரைகள் பிரபலமாயின.

அறுபத்தெட்டு நாடுகள் சுற்றிய அனுபவத்தில் ஏராளமான பயணக் கட்டுரைகள் எழுதினார் வினோத். கோல்டு அவார்ட், கிரான்ட் அவார்டு, உலகிலேயே மிகச் சிறந்த பயணக்கட்டுரையாளர் விருது, 24 நியூஸ்பேப்பர்கள் வெளியிடும் ஹெர்ஸ்ட் க்ரூப்பில் தலை சிறந்த எழுத்தாளர், அமெரிக்கப் பத்திரிகை உலகைச் செழிக்கவைத்த இந்தியர் என்று எக்கச்சக்க கௌரவங்கள். இருமுறை அமெரிக்க எழுத்தாளர்கள் மிகப் பெருமையாகக் கருதும் புலிட்சர் பரிசுக்குக் கூட பரிந்துரைக்கப்பட்டார். தகவல் தொடர்புத் துறையில் நடக்கும் அட்டூழியங்கள்; குடிபெயர்ந்த பண்ணைத் தொழிலாளர்கள் படும் அவஸ்தை; அமெரிக்க மிலிடரியின் ரகசிய அமைப்பு செய்த குளறுபடி என்று நிறையவே இன்வெஸ்டிகேடிவ் ரிப்போர்ட்டுகள் எழுதிய அதிரடி ஜர்னலிஸ்ட்!

"பத்திரிகையாளராக இருந்து பிஸினஸ் மேனாகி விட்டீர்கள். இப்போது எந்தெந்த இந்தியத் தயாரிப்புகளுக்கு அமெரிக்காவில் 'டிமாண்ட்' இருக்கிறது?"

"ஆயுர்வேத மருந்துகளுக்கு.



• வினோத் மற்றும் லிண்டா சாப்ரா.

ஹெர்பல் (மூலிகை) தயாரிப்புகளுக்கு. கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர். பிராசஸ் செய்யப்பட்ட பழங்கள்- காய்கறிகள். அதே போல, இங்கே குறைந்த செலவில் தங்கவும் உணவருந்தவும் விரும்பும் டூரிஸ்ட்டுகளுக்கு ஏற்ற ஹோட்டல்களுக்கு நல்ல கிராக்கி இருக்கிறது..."

இரண்டு இதயங்களை இணைத்த எழுத்தும் பிஸினஸும், இப்போது இரு நாடுகளையும் இணைத்து விட்டன!

சந்திப்பு : சாருகேசி

படம் : அவினாஷ் பஸ்ரிசா

நன்றி : ஸ்பான்.



# ஐடியா கொடுப்பதே முதல் வேலை!

**வீ**ட்டு வேலைகள் ஒருபுறம் இருக்க, தம் கணவருக்கு, அவரது பட வேலைகளில் ஐடியா கொடுப்பதை முதல் ஜோலியாக வைத்திருக்கிறார் சுஜாதா. டைரக்டர் ஆர்.வி. உதயகுமாரின் திருமதி.

"சின்னச் சின்ன ஐடியாக்கள் உதிக்கும் போது அவரிடம் சொல்லி விடுவேன். அவர் டெவலப் பண்ணி பிரமாதமான கதை ஆக்கிடுவார். ஒரிஜினல் 'நாட்' நான் சொன்னதுதான் என்பதற்காக, டைட்டில் கார்டில் 'மூலக்கதை – சுஜாதா உதயகுமார்'னு கௌரவம் கொடுப்பார். பெருமைதான் இல்லையா?" என்கிறார் சுஜாதா.

"அப்படி என்னென்ன படங்களுக்கு இதுவரை ஐடியா தந்திருக்கிறீர்கள்?"

"ரஜினி நடித்த 'எஜமான்' கதையே நான் கொடுத்த ஐடியாதான்!" என்று சுஜாதா சொன்னபோது உதயகுமார் குறுக்கிட்டார்.

"ஏ.வி.எம்.முக்காக ரஜினியை வைத்துப் படம் செய்வது என்று முடிவானதும் முதலில் நான் சொன்னது ஒரு 'ஆக்‌ஷன்' கதை. 'ஜில்லா கலெக்டர்' என்பது டைட்டில். ஆனால் ரஜினி, 'மாறுபட்ட கிராமத்து வேடத்தில் நடிக்கலாமே' என்று ஆசைப்பட்டதால் புதிய கதை தேவைப்பட்டது. ஷூட்டிங்குக்குப் பதினைந்தே நாள் இருக்க, அதற்குள் கதை பண்ணியாக வேண்டிய கட்டாயம்!"

சுஜாதா தொடர்ந்தார் : "திடீர்னு எனக்கு ஒரு ஃப்ளாஷ் தோணிச்சு. 'கட்டின பெண்டாட்டி கண்ணுல ஒரு சொட்டு தண்ணி வராம கடைசி வரை காப்பாத்தறவன் தான் உண்மையான ஆம்பளை' அப்படீங்கற மாதிரி. இவர்கிட்ட சொன்னேன். 'பிரமாதமான ஐடியா'ன்னு துள்ளிக் குதிச்சார்!"

"உடனே ரஜினிக்கு இந்த மாதிரியான கேரக்டர்னு முடிவு பண்ணி, கணவன் – மனைவி அன்னியோன்னியத்தைப் பிரதானமாக வைத்து கதை ரெடி பண்ணி விட்டேன். எஜமான் சூப்பர் ஹிட் ஆனது!" என்றார் உதயகுமார்.

**வ**ரப் போகிற 'சின்ன ராமசாமி பெரிய ராமசாமி' படத்தின் கதை ஐடியா கூட சுஜாதாவுடையதுதானாம்! அவரது தூரத்து உறவினர் ஒருவர்

> “ரஜினி நடித்த ‘எஜமான்’ கதையே நான் கொடுத்த ஐடியாதான்!”

குடும்பத்தில், நாலு பையன்கள். நால்வரில் கடைசிப் பையனை மட்டும் யாரும் கண்டுகொள்ளவே மாட்டார்கள். வெறுப்பு. காரணம் அவன் பிறந்ததும், அப்பா இறந்து விட்டதால், ‘தந்தையை முழுங்கியவன்’ என்ற வெறுப்பு.

“இந்த விஷயத்தை சுஜாதா சொன்னதும் டெவலப் பண்ணி சி.ரா.பெ.ராவை எடுத்துக் கொண்டிருக்கிறேன்” என்றார் உதய்.

“கதையின் கருவைக் கொடுப்பதுடன் சரியா, உங்கள் பணி?”

“காட்சிகள் அமைக்கும் போது கூட ஐடியா தருவதுண்டு. ‘பொன்னுமணி’ படத்தில் கதாநாயகி, கல்லூரியிலிருந்து ஊருக்குத் திரும்பி வருகிறாள். அவளை வரவேற்க, சந்தோஷமாக ஸ்டேஷனுக்குப் போகிற பொன்னுமணிக்கு ஷாக். அவள் பைத்தியமாக இருக்கிறாள். ‘பைத்தியம் பிடிக்க என்ன காரணம் சொல்லலாம்’ என்று யோசித்துக் கொண்டிருந்தேன். ‘ஒரு வில்லன் கேரக்டரை உருவாக்கி, அவன் ஹீரோயினைக் கற்பழிக்க முயன்ற தருணத்தில் அவள் பைத்தியமாகிறாள்’ என்று சுஜாதாதான் ஐடியா கொடுத்தார். அப்படியே செய்தேன்!” என்றார் உதயகுமார்.

“**பா**ட்டு எழுதக் கூட நான் ஐடியா தருவதுண்டு. ஒருநாள் இரவு ஒரு ட்யூனுக்குப் பாட்டு எழுத இவர் உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருந்தார். ‘எதைப் பற்றி எழுத? எப்படித் தொடங்க?’ என்று கேட்டார். நான் சும்மா தமாஷாக என் காதில் அணிந்திருந்த லோலாக்குகளைக் காட்டி, ‘இதை வைத்து எழுதுங்களேன்’ என்று சொல்லி விட்டுத் தூங்கி விட்டேன்.

“விடிந்து, பார்த்தால் அருகில் பாடல் முழுமையாக எழுதப்பட்டு இருந்தது.

“அதுதான் பின்னால் ரொம்பப் பிரபலமாகி விட்ட ‘காதோரம் லோலாக்கு... கதை சொல்லுதடி!’”

சந்திப்பு : **மௌலி**



“கிரிக்கெட் மைதானத்தில் என்ன கூச்சல்?”

“ஆட்டம் போரடிக்குதாம். சைட் ஸ்கிரீனில் சினிமா காட்டச் சொல்றாங்க!”

— ஞா. ஞானமுத்து



“ ‘வீட்டு வேலைங்க எனக்கு அதிகமா இருக்கு’ன்னு நான் குறைப்பட்டுக்கிட்டது உண்மைதான்; அதுக்காக ‘உன் வேலைகளை பாதியா குறைக்கறேன்’னு சொல்லிவிட்டு ரெண்டாம் கல்யாணம் பண்ணிக்கிட்டு வந்திருக்கீங்களே, நியாயமா?”

- பாஸ்‘ரு



“ரயில்வே ஆபீஸர் பெண்ணுக்கு லவ் லெட்டர் அனுப்பினியே, என்ன ஆச்சு?”

“என் லெட்டரை வெயிட்டிங் லிஸ்டிலே வைச்சிருக்காளாம்!”

— வெ. ராஜாராமன்

# நடராஜ் எஸ்டேட்ஸ்

## வழங்கும், வாரம் தோறும்

## காய்கறி - திட்டம்

**Phone : 4342098, 4840150**

"சாந்திகாம்ப்ளெக்ஸ்", 3 வது மாடி., 26, ரங்கநாதன் தெரு, திநகர், சென்னை 600 017.

கிளைகள் : 51, தெற்கு வீதி, திருவாரூர் - 610 002. 2-B, செல்வம் நகர், தஞ்சாவூர் - 613 007.

1-B, காமராஜ் சாலை, காஞ்சிபுரம் - 613 501.

*சென்னை நகர வாசிகளுக்கு மட்டும்*



- ரூ. 5,000 செலுத்தி 3 ஆண்டு காலத்துக்கு "மெம்பர்" ஆக வேண்டும்.
- 3 ஆண்டு காலத்துக்கு பிறகு "மெம்பர்ஷிப்" கட்டணத்தை திரும்ப பெற்றுக் கொள்ளலாம்.
- அல்லது மீண்டும் 3 ஆண்டுகளுக்கு புதுப்பித்துக் கொள்ளலாம். (ரினிவல்).
- மெம்பர்ஷிப் கட்டணத்துக்கு அங்கீகரிக்கப்பட்ட வங்கிகள் அளிக்கும் 12% P.A. வட்டியும் உண்டு.



மெம்பர்ஷிப் கட்டணத்தை நேரிலோ, "செக்" மூலமாகவோ, டி.டி. ஆகவோ அளிக்கலாம்.

### ஞாயிறு தோறும் சப்ளை

ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும், காலை சூரியன் உதிக்கும் நேரத்தில் எங்கள் விவசாய வளர்ச்சி பிரதிநிதி - பசுமையான சத்துமிகுந்த காய்கறிகள் நிறைந்த, - அழகிய பாலிதின் மற்றும் சணல் பைகளுடன் உங்கள் வீட்டின் கதவை இன்முகத்துடன் தட்டுவார்.

### இலவசம்



அழகிய கவர்ச்சிகரமான உறுப்பினர் கார்டையும் அத்துடன் காய்கறி நறுக்கும் **S.S.** கட்டரையும் முற்றிலும் இலவசமாக பெற்று செல்லுங்கள்

பூச்சிக் கொல்லி மருந்து, மற்றும் ரசாயன உரங்களை 99% தவிர்க்க முயற்சி செய்கிறோம். இயற்கை உரம் இடுவதால் உங்கள் உடல் நலம் முற்றிலும் பாதுகாக்கப்படுகிறது.

திட்டமிட்ட குடும்பத்துக்கு தேவையான காய்கறிகள் தக்காளி, முள்ளங்கி, வெண்டைக்காய், கத்தரிக்காய், புடலங்காய், பாகற்காய், வாழைக்காய், மிளகாய் போன்ற காய்கறி வகைகளும், கொத்துமல்லி, கறிவேப்பிலை, முளைக்கீரை போன்ற கீரைவகைகளும், மாற்றி மாற்றி சப்ளை செய்யப்படும்.



**NATARAJ GROUP OF COMPANIES**
**NATARAJ FINANCE & INVESTMENTS**
**NATARAJ CHITS (TAMILNADU) PVT., LTD.,**
**NATARAJ EXPORTS OVERSEAS, NATARAJ OIL MILLS**
**NATARAJ PUBLICATIONS, T.K. GEETHA AGRO PRODUCTS**

**24% P.A.**

# சுஜாதா பக்கம்



நோவம் சாம்ஸ்கி (Noam Chomsky) மொழி இயலில் புதிய கருத்துக்களைக் கொண்டு வந்தவர். குழந்தைகள் மொழி கற்கும் விதத்தை ஆராய்ந்து, மனித மொழிகளின் ஆழமான அமைப்புகளையும் (deep structures) அமைப்பு மாற்ற (transformation) விதிகளையும் அறுதியிட்டவர். அவர் சமூக அறிவியல், அரசியல் விமர்சனம், ஊடகங்கள் - குறிப்பாகச் செய்தித்தாள்கள் எப்படி நம்மை ஏமாற்றிச் சம்மதத்தை உற்பத்தி செய்கின்றன என்பதைப் பற்றியெல்லாம் சிந்திக்க வைத்து, அமெரிக்க மனங்களைக் கலக்கிக் கொண்டிருக்கிறார். வியட்நாம் குறுக்கீட்டை எதிர்த்துச் சிறை சென்றிருக்கிறார். இராக் போரையும் பலமாக எதிர்த்தவர். இரண்டாம் உலகப் போரில் யூதர்களை ஹிட்லர் கொன்ற குற்றம் மிகவும் மிகைப்படுத்தப்பட்டது. கம்போடியா 'போல்பாட்'டிலும் இந்தோனேசியத் தீவு ஒன்றிலும் அமெரிக்க சம்மதத்துடன் ராணுவ அராஜகத்தில் ஓர் இனத்தையே அழித்ததில் இறந்தவர்கள் எண்ணிக்கை அதிகம் என்று சொல்லி, கண்டனத்துக்கு உள்ளானார்.

சாம்ஸ்கியின் புத்தகங்களும் சொற்பொழிவுகளும் இளைய தலைமுறையினரால் பெரிதும் விரும்பப்பட்டும் பலரால் வெறுக்கப்பட்டும் வருகின்றன.

அண்மையில் சாம்ஸ்கி ஓசைப்படாமல் இந்தியா வந்து ஒரு லெக்சர் கொடுத்துவிட்டுச் சென்றார். நல்ல காலம், அவரை தூர்தர்ஷனும் 'ஹிந்து' போன்ற ஏடுகளும் பேட்டி கண்டன. நம் பொருளாதாரச் சீர்திருத்தங்களைப் பற்றி அவர் சொன்ன கருத்துக்கள் சிந்திக்கத் தக்கவை :

"பொருளாதார நிபுணர்களும் உலக வங்கியும் ஆணையிட்டுச் செயல்பட்டால் நாசத்தை நோக்கித்தான் செல்வீர்கள். எனக்கு இந்தியாவைப் பற்றி அதிகம் தெரியாது. அதனால் விவரமாகப் பார்க்காமல் இந்தியாவில் என்ன நிகழும் என்று சொல்ல இயலாது. ஆனால் சரித்திரத்தில் பல உதாரணங்கள் உள்ளன. இந்தியாவில் பிரிட்டிஷ் காலனியாதிக்கத்திலேயே அவர்கள் பரிசோதனை செய்யத் துவங்கினார்கள். என்ன ஆச்சு?... உங்களுக்குத் தெரியும். பதினெட்டாம் நூற்றாண்டில் இந்தியா இங்கிலாந்தைவிட அதிகத் தொழில் முன்னேற்றம் பெற்றிருக்கும். பிரிட்டிஷ் ஆதிக்கம் அதை ஒடுக்கிவிட்டது! ஆடம் ஸ்மித் போன்றவர்கள் இதைக் கண்டித்திருக்கிறார்கள். தற்கால இந்தியா ஊழலில் ஊன்று கொண்டிருக்கிறது. இதன் பொருளாதாரம் பெரும்பாலும் கறுப்பானது. ஊழல், கையூட்டு, கொள்ளை இவைகளால் கிடைத்த கறுப்புப் பணம்தான் இந்தியாவில் ஆதிக்கம் செய்கிறது.

"பிரேசில் ஓர் உதாரணம். அறுபதுகளில் உங்களைப் போல் அவர்களும் தாராளமயமாக்கினார்கள். பொருளாதாரம் மிக வேகமாக வளர்ந்தது. யாருக்கு? பத்து சதவிகித மக்களுக்கு. மற்ற தொண்ணூறு சதவிகிதத்தினருக்கு எந்த மாறுதலும் இல்லை. அதேதான் உங்களுக்கும் நிகழப் போகிறது. இந்தத் தந்திரம், முன்னேற்ற நாடுகளில் கூடச் செல்லவில்லை. உலகிலேயே பணக்கார நாடாகிய அமெரிக்காவில் மற்ற முன்னேற்ற நாடுகளைவிட ஏழ்மை இருமடங்கானது. குழந்தைகள் போஷாக்கு குறைவு, சிசு மரணம், வயசானவர்கள் பட்டினி - இவையெல்லாம் இன்றும் அதிகம். அமெரிக்க நாடு சிறிய, மிகமிக பணக்காரக் குழுக்களாகவும் கணிசமான ஏழை மக்களின் குழுக்களாகவும் பிரிந்துவிட்டது. அதேதான் உங்கள் நாட்டிலும் நிகழப் போகிறது. உங்கள் தாராள மயமாக்குதலைச் செயல்படுத்துபவர்கள் பணக்காரராவார்கள். உங்கள் வளத்தில் தொழிலாளிகள் பங்கு குறையும். ஏழை - பணக்கார வித்தியாசம் அதிகரிக்கும். பசி அதிகமாகும். சுற்றுச் சூழல் நாசமாகும். ஆரோக்கியம் கெடும். பணவீக்கம் குறையும். நாட்டில் ஒரு சிலர் மிக மிகப் பணக்காரரா வார்கள். விவசாயத் துறையில் உங்கள் ஆராய்ச்சி முயற்சிகள் பாதிக்கப்படும்.

"இந்தியா விவசாய நாடு. உங்கள் விவசாய ஆராய்ச்சியாளர்கள் மிகச் சிறந்தவர்கள். அவர்களைப் பன்னாட்டு நிறுவனங்கள் வளைத்துப் போட்டு, ஐந்து மடங்கு அதிக சம்பளம் கொடுத்து உள்நாட்டு முயற்சிகளைக் கொன்றுவிடுவார்கள். உங்கள் மருத்துவ ஆராய்ச்சியின் சிறப்பையும் இழப்பீர்கள். இனி பாகிஸ்தானில் போல, இந்தியாவிலும் மருந்துகளின் விலை அதிகரிக்கும். தாராளமயமாக்குவதன் அர்த்தமே இதுதான். உள்நாட்டு ஆராய்ச்சியைக் கொல்வது.

"கனடாவுக்கு இது நிகழ்ந்தது. அமெரிக்க வியாபார ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டதும் அதன் சிறப்பான உள்நாட்டு மருத்துவ ஆராய்ச்சிகள் பாதிக்கப்பட்டன.

"அமெரிக்கா உங்களைப் படையெடுக்காமலேயே அமெரிக்க பன்னாட்டு நிறுவனங்களால் நீங்கள் ஆளப்படுவீர்கள்..."

- இவ்வாறு சாம்ஸ்கி சொன்னது நம் நாட்டில் நிகழ்வதை இப்போதே கவனிக்க இயலும். மூன்று மாடல் இருந்த நாட்டில் இன்று, ஆறு லட்சத்திலிருந்து பதினெட்டு லட்சம் வரை விலையில் பதினெட்டு கார் மாடல்கள். உள்நாட்டு டீ.வி. எலெக்ட்ரானிக்ஸ் ஆராய்ச்சி செத்துக் கொண்டிருக்கிறது. சூயிங்கம், சானிட்டரி நாப்கின் போன்றவைகளுக்கெல்லாம் அயல்நாட்டுத் தொழில்நுட்பத்தை நாடுகிறோம். செல்லுலர் போன் வந்து சினிமா நடிகர்களும் சிட்பண்டு அதிபர்களும் ஹவாலா மன்னர்களும் ஆளுக்கொன்று கையில் வைத்துக் கொண்டு மனைவிகளோடு பேசுகிறார்கள்! பணவீக்கம் ஐந்து சதவிகிதத்துக்கு அருகில் வந்துவிட்டது என்கிறார்கள். தபால் கார்டு, நிரோத் - இரண்டைத் தவிர வேறு ஏதாவது விலை ஏறாமல் இருந்திருக்கிறதோ?

(மீண்டும் அடுத்த வாரம்)

# 11. மருத்துவர் இல்லத்தில் மாய உருவம்!



ஒரு தலைவனிடம் ஏற்படும் பலவீனம் அவன் மக்களையும் எத்தனை தூரம் பாதிக்கும் என்பதற்கு எடுத்துக்காட்டாக நின்றிருந்தான் கொங்கு நாட்டு மன்னன் அவநிதன். சோழ ராஜராஜன் அன்னியருக்கு இடம் கொடுத்துவிட்டதால், சோழ நாட்டை மட்டுமின்றி அதற்கு உட்பட்ட சிற்றரசுகளையும் அடிமைப்பட வைத்து விட்டிருந்தான். பெயரளவிற்குச் சிற்றரசாக இருந்தாலும் அது வரையில் சர்வ சுதந்தரமாகச் செயல்பட்டுக் கொண்டிருந்த கொங்கு நாட்டின் மன்னன் அவநிதன் நாட்டையும், அதிகாரத்தையும் இழந்ததுடன் ஒரே மகளையும் இழக்கும் நிலைக்கு வந்திருந்தான். எனவே, அவன் நிதானத்தை இழந்ததிலோ, மகளின் இந்த நிலைக்குக் காரணமான சூரிய காங்கேயனைக் கொன்றுவிட முயன்றதிலோ வியப்பேதுமிருக்கவில்லை.

அவநிதனின் முயற்சியை மருத்துவரின் உரத்த குரல் தேக்கியது. "நில், மன்னா நில்" என்று பலமாக ஒலித்த மருத்துவரின் குரலில் அடுத்து கடுமையும் ஒலித்தது. "மன்னவா, இவனைக் கொல்வதால் தங்கள் மகள் உயிர் பிழைத்து விடப் போவதில்லை. இவனைக் கொன்ற பின்பு ஏற்படக் கூடிய விளைவுகளைச் சற்றேனும் சிந்தித்துப் பாருங்கள்...."

அவநிதனின் பதில் அலட்சியத்துடன் வந்தது: "மருத்துவரே, என்னைத் தடுக்காதீர்கள். இவனைக் கொன்றபின் போசள சிங்கணன் இந்தக் கோட்டையையும் அரண்மனையையும் அழிக்கலாம். என்னையும் கொல்லலாம். என் மகன் மடிந்த பிறகு நான் உயிர் வாழ விரும்பவில்லை."

மன்னன் பதிலிலிருந்த ஆவேசத்தையும் அலட்சியத்தையும் கவனித்த மருத்துவர் அவனுக்கு நேர் எதிரில் வந்து நின்றார். அவர் விழிகள் மன்னன் விழிகளை நிர்ப்பயமாகச் சந்தித்தன. "மன்னவா, தமிழகத்தில் எந்தக் குற்றவாளியையும் தீர விசாரிக்காமல் கொல்வதோ, தண்டனை அளிப்பதோ இன்று வரை கிடையாது.

**விஷ்வக்சேனன்**

இவனைக் கொன்றே தீருவது என்று தீர்மானித்தீர்களானால் அந்தப் பொறுப்பை என்னிடம் விடுங்கள். இரண்டே நரம்புகளைத் தட்டி இவன் விழிகளைத் தவிர வாழ்நாள் முழுவதும் வேறு அசைவே இல்லாமல் செய்து விடுகிறேன். நீங்கள் அந்தக் களங்கத்தைச் சுமக்க வேண்டாம். நீங்கள் கூறியபடி உங்கள் உயிர் உங்களுக்குத் துச்சமாக இருக்கலாம். ஆனால் எனக்கும், இந்தக் கொங்கு நாட்டு மக்களுக்கும் இருக்கும் ஒரே நம்பிக்கை நீங்கள்தான். அந்த நம்பிக்கையையும் சிதைத்து விடாதீர்கள். அந்தக் குறுவாளை இப்படித் தாருங்கள்" - மருத்துவரது குரலிலிருந்த வேகமும் அவர் வார்த்தைகளிலிருந்த உண்மையும் அவநிதன் கரத்தைத் தாழ்த்த வைத்தன.

நடந்த சம்பவம் சூரியகாங்கேயனை ஓர் உலுக்கு உலுக்கிவிட்டதால், திகைத்துப் போய்ச் சிலையாக அதுவரை நின்றவன் திரும்பி வாயிலை நோக்கி நகர முற்பட்டான். மருத்துவரின் குரல் அவனைத் தடுத்தது - "காங்கேயா, நில்!" என்று.

சற்று முன்பு அவர் கூறிய தண்டனை முறைகள் காங்கேயனைக்



# இந்திர தனுசு

கலக்கியிருந்ததால் அவர் தன்னை நோக்கி வரத் தொடங்கியதும் அவன் கரிய முகத்தில் கலவரமும் அச்சமும் படர்ந்தன. அவன் கலவரத்தைக் கவனித்த மருத்துவர் உள்ளுக்குள் நகைத்துக் கொண்டாரென்றாலும் வெளிக்காட்டாமல் முகத்தில் கடுமையை வரவழைத்துக் கொண்டபடியே, "காங்கேயா, நீ இளவரசியாருக்கு அளித்த மூலிகையுடன் கோரக்க மூலிகையைச் சேர்த்தாயா?" என்றார்.

காங்கேயன் முகத்தில் அச்சத்துடன் வியப்பும் சேர்ந்து கொண்டது. "ஆம் மருத்துவரே, உத்தமபாளையத்திலிருந்து ஸ்காந்தபுரம் வரையில் நீண்ட பயணம் என்பதால் ஐந்து துனிகளை அதிகமாகச் சேர்த்தேன்" என்றான் அவன்.

மருத்துவரின் முகத்தில் வெறுப்பு வழிந்தது. "பச்சிலையுடன் இரண்டு துனிகளுக்குமேல் சற்றுக் கலந்தாலே கோரக்க மூலிகை சுவாசப்பையை அழித்துவிடும். மூலிகைகளின் தன்மையை அறியாமல் அதைப் பயன்படுத்துவது தவறு என்பது தெரியாதா உனக்கு? போ, போய் சிங்கணனிடமும் உன் மன்னன் வீர சோமேஸ்வரனிடமும் நீயே இளவரசியைக் கொன்று விட்டதாகச் சொல்" என்றார் மருத்துவர்.

காங்கேயன் திருதிருவென விழித்தான். வீர சோமேஸ்வரனுக்கு இந்தச் செய்தி கிடைக்குமானால் தன்னை உயிருடன் தோலுரித்து விடுவான் என்பதை உணர்ந்தான். ஏனெனில் தனது மகனுக்கு இளவரசியை வலுக்கட்டாயமாகவாவது மணமுடிப்பதன் மூலம் கொங்கு நாட்டிலும், சோழ மண்ணிலும் தன்னை ஸ்திரப்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டிருந்தான் வீர சோமேஸ்வரன்.

காங்கேயனின் அச்சத்தை இன்னும் உயர்த்த மருத்துவரின் குரல் மீண்டும் ஒலித்தது. "ஏன் விழிக்கிறாய்? நீயாகப் போய் உன் மன்னனிடம் குற்றத்தை ஒப்புக் கொள்கிறாயா அல்லது சோமகேசி இளவரசியைக் கொன்று விட்டான் என்று நான் செய்தியனுப்பவா?" என்றார் மருத்துவர்.

எதிரில் நின்றவனது கரிய முகத்திலிருந்த திகில் இன்னும்

## அருள்வாக்கு

**கொ**டுக்க வேண்டும். அதுதான் த்யாகம். அதைத்தான் வேதம் எங்கே பார்த்தாலும் வற்புறுத்துகிறது. எந்தக் கர்மாவும் செய்து முடிக்கும்போது, "நான்தான் கர்த்தா என்பதால் இதன் ப்ரயோஜனம் முழுதும் எனக்கே வந்துவிடப் போகிறதே: அப்படி என் ஒருத்தனுக்கு மட்டும் பலன் கிடைத்து விடக் கூடாது" என்கிற பரம த்யாக புத்தியில் "ந மம" - "எனதில்லை; எனக்கில்லை" என்று அதன் பலனை லோக க்ஷேமார்த்தம் - த்யாகம் பண்ணச் சொல்கிறது நம்முடைய மதம்.



மற்ற வஸதுக்களைக் கொடுத்துவிட்டு, "நான் கொடுத்தேன்" என்ற எண்ணத்தை மட்டும் வைத்துக் கொண்டு இருந்தால் இந்த அஹங்காரமானது த்யாகத்தாலும் தானத்தாலும் கிடைக்கிற ஆத்மாபிவிருத்தியை அப்படியே ஏப்பம் விட்டுவிடும். த்யாகம் பண்ணவேண்டும்; அதைவிட முக்கியமாக, த்யாகம் பண்ணினேன் என்ற எண்ணத்தையும் த்யாகம் பண்ணிவிட வேண்டும்.

மஹாபலி நிறையக் கொடுத்தான்; வாரி வாரிக் கொடுத்தான். ஆனால் தான் கொடுக்கிறோம் என்ற அஹங்காரத்தை அவன் பகவானுக்கு பலி கொடுக்கவில்லை. இதனால் தான் பகவானே அவனிடம் இந்த அஹங்காரத்தை யாசகமாகப் பெற்று, அஹங்கார நாசத்துக்கு அடையாளமாகத் தலையிலே கால் வைத்தான்.

"ஸோஷல் ஸர்வீஸ் பண்ணுகிறேன்" என்று சொல்லிக் கொண்டு வெளியில் ஏதேதோ பண்ணிக் கொண்டு அஹங்காரத்தைக் கரைக்காமல் இருந்தால் இவனுக்கும் ப்ரயோஜனமில்லை; இவனுடைய ஸர்வீஸால் லோகத்துக்கும் ப்ரயோஜனமிராது. தாற்காலிகமாக ஏதோ நன்மை நடந்தது போல் படாடோபமாகத் தெரியலாம்; ஆனால் அது நின்று நிலைத்து விளங்காது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

அதிகமாகியது.

"சோமகேசி, நீ சாளுக்கியன் என்பதையும் சூரிய காங்கேயனைக் கொன்று விட்டு அவன் பெயரில் பாண்டிய நாட்டில் உலவியதையும் நான் அறிவேன். கொங்கு நாட்டில் மாற்றுப் பெயரைக் கொண்டு ஏய்ப்பது எளிதல்ல சோமகேசி!" என்ற மருத்துவர், "நீ விழித்தது போதும். இளவரசியாரின் உயிருக்கு இந்த நிலையில் நான் உத்தரவாதமெதுவும் அளிக்க முடியாது. எதற்கும் என் குடிலுக்கு இளவரசியை எடுத்துச் சென்று முயன்று பார்க்கிறேன். இரண்டு நாழிகைக்கொருமுறையென்று அவர்களுக்கு மூலிகைகள் அளித்துப் பார்த்தால் ஓரளவு பிழைக்க வாய்ப்பிருக்கிறது. போய் சிவிகையொன்றை எடுத்து வரச் சொல்" என்றார்.

அவன் வெளியேறிய பின்பு மன்னனை நெருங்கிய மருத்துவர் குரலைப் பெரிதும் தாழ்த்திக் கொண்டார். "மன்னவா, இளவரசியாருக்கு அபாயம் ஒன்றுமில்லை. ஆனால் அவர் மயக்கத்தை இங்கே தெளிவிப்பதுதான் அபாயம். என் குடிலுக்கு அழைத்துச் சென்றுவிடுகிறேன்."

"என்ன கூறுகிறீர் மருத்துவரே?"

"ஆம் மன்னவா. இளவரசியாரின் மயக்கம் சாதாரணமானதுதான். ஆனால் அவர் இங்கே விழித்துவிட்டால் பிறகு தங்களுடன் இளவரசியும் அரண்மனையிலேயே சிறையிருக்க வேண்டிவரும். சற்று எண்ணிப் பாருங்கள்...."

**ம**ன்னன் முகத்தில் மிதமிஞ்சிய ஏக்கம் பிரதிபலித்தது. பல ஆண்டுகள் கழித்துத் தன்னிடம் வந்த ஒரே மகளுடன் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் மீண்டும் பிரிவது அவன் உள்ளத்தைச் சுக்குநூறாக்கியது. ஆனால் மருத்துவர் கூறியதில் இருந்த உண்மை மெல்ல அவன் உணர்ச்சிகளுக்கு அணை போட்டதால் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டவன், "மருத்துவரே, அவளை இங்கிருந்து தப்பிக்க வைக்க உங்களால் இயலுமா? தப்பிய பின்பு எங்கு அனுப்பப் போகிறீர்கள்?" என்றான் கரகரத்த குரலில்.

"கவலைப்பட வேண்டாம் மன்னவா! நீங்கள் யாரை நம்பி இளவரசியைச் சிறு வயதிலேயே ஒப்படைத்தீர்களோ, அந்தச் சைவத் துறவியாரிடமே அவரை அனுப்பி வைக்கிறேன். சரியாக இன்றைக்கு மூன்றாவது நாள் இளவரசியார் தஞ்சையிலிருப்பார்" என்ற மருத்துவரின் கரங்களைப் பிடித்துக் கொண்ட மன்னனின் விழிகள் கலங்கியிருந்தன.

"கலங்க வேண்டாம் மன்னா. விரைவில் காலம் மாறிவிடும்" என்று ஆறுதலளித்த மருத்துவர் மீண்டும் சோமகேசி வருவதைக் கண்டு முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டார்.

## கனாக் கண்டேன் தோழீ...

புதிய மினி தொடர்கதை பக்கம் 20-ல் ஆரம்பம்.

பணிப்பெண்கள் இளவரசியை அசையாமல் எடுத்துச் சிவிகையில் கிடத்த, பின்னால் நடந்த மருத்துவரின் விழிகள் ஒருமுறை திரும்பி மன்னனை நோக்கின.

மருத்துவர் வீசிய பார்வை தந்த ஆறுதலால் சற்றே ஆறுதலடைந்த அவநிதனின் விழிகளை நீர்த்திரை மறைத்தது. அரண்மனையிலும் கோட்டையிலும் நெடுக நின்றிருந்த போசள வீரர்களை வெறுப்புக் கலந்த பார்வையுடன் கவனித்தபடியே வந்த மருத்துவரைத் தொடர்ந்து சோமகேசியும் உடன் போசள வீரர்களும் வந்தனர்.

தமது குடிலையடைந்ததும் இரு பணிப்பெண்களைத் தவிர மற்றவர்களைத் திருப்பியனுப்பிய மருத்துவர், சோமகேசியிடம் இரண்டு தினங்கள் கழித்து வந்தால் போதுமென்று கூறியனுப்பவும் செய்தார். குடிலைவிட்டு வெளியே வந்த சோமகேசி, சற்று நின்றான். வெளியில் மக்கள் கூட்டம் மருத்துவருக்காகக் காத்துக் கிடந்தது. இல்லத்தின் முன்பும் மரநிழல்களிலும் முதியவர்களும் பெண்களும் குழந்தைகளும், திடகாத்திரர்களும் கூட நிரம்பியிருப்பதைக் கண்ட சோமகேசி 'ஸ்காந்தபுரத்து மக்களில் இத்தனை பேர் நோயுற்றவர்களா?' என்று வியந்தான். சற்றுத் தள்ளியிருந்த மரத்தை நோக்கி இரு வீரர்களுடன் நடந்தவன், சட்டென்று மரத்தினடியில் நின்றான். உடன் வந்த வீரனை அழைத்தவன், "அந்தக் கிழ மருத்துவனை நம்ப இயலாது. இந்தக் குடிலுக்குச் சற்றுத் தள்ளியிருந்து இவனைக் கவனித்துக் கொள்ளுங்கள். நான் சோழ நாட்டிலிருக்கும் நமது வீரர்களுடன் மீண்டும் உத்தமபாளையத்திற்குச் சென்று அதைக் கைப்பற்றுகிறேன். தண்டநாயகருக்கும் தாக்குதலைத் தொடங்கிவிடுமாறு செய்தியனுப்ப வேண்டும். என்னுடன் உத்தமபாளையத்திலிருந்து வந்த நமது வீரனை அழைத்து வா" என்று உத்தரவிட்டான்.

சற்று நேரத்தில் அந்த மரத்தினடிக்கு வந்த வீரனை நோக்கியவன், "நீ இடைப்பாடி நாட்டுக்குச் சென்று இந்த ஓலையைச் சிங்கணரிடம் கொடுத்துவிடு. இளவரசி பாண்டி நாட்டில் இல்லையென்றும் தாக்குதலைத் தொடங்கலாம் என்றும் தெரிவித்துவிடு" என்றான்.

ஒரு முறை சுற்றுமுற்றும் பார்த்த சோமகேசி, மக்கள் கூட்டம் சற்றுத் தள்ளியேயிருப்பதைக் கவனித்து, திருப்தியுடன் தலையசைத்தபடி அங்கிருந்து அகன்றான். அதுவரை மரத்தின் மறுபுறத்தில் ஒருவன் நோயாளியைப் போலக் கம்பளியொன்றைப் போர்த்தியபடி படுத்துக் கிடந்ததையோ, அவன் பேசியவற்றை ஒரு வார்த்தை கூட விடாமல் அவன் கவனித்துக் கொண்டிருந்தான் என்பதையோ சோமகேசி அறியவில்லை.

மருத்துவரது குடிலுக்குள் நோயாளிகளைக் கவனித்து மூலிகைகளையும், குளிகைகளையும் அளித்து அனுப்பும் பணி வெகு மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. மாலை மங்கி இருள் லேசாகப் பரவிய பொழுதில்தான் மருத்துவர் இல்லத்திலிருந்த கூட்டம் கரைந்து ஓரிருவர் மட்டும் தங்கள் முறைக்காகக் காத்திருந்தனர். அன்று முழுவதும் மூலிகைகளைக் கலுவத்தில் இட்டு அரைத்தும் பச்சிலைகளைப் பிழிந்தும் பணி செய்த அலுப்பு மருத்துவரின் சீடர்கள் முகங்களில் தெரிந்தது.

இருக்கும் ஓரிருவரும் வெளியேறிய பின்பு சீடர்களும் மருத்துவரிடம் விடைபெற்றுக் கொள்வதையும் மருத்துவர் குடிலின் பின்புறத்திலிருந்த மூலிகைத் தோட்டத்தை நாடிச் செல்வதையும் மரத்தினடியிலிருந்தபடியே கவனித்துக் கொண்டிருந்தான் அந்தக் கம்பளி போர்த்திய மனிதன்.

குடிலின் பின்புறத்து அறையில் பட்டு விரிப்பொன்றின் மீது படுத்துக் கொண்டிருந்த இளவரசிக்கு மெல்ல நினைவு திரும்ப ஆரம்பித்திருந்தது. மூடியிருந்த இமைக்குள் அசைந்த விழிகள் அதை நிரூபித்துக் கொண்டிருந்தன. மருத்துவர் அளித்திருந்த மூலிகைச் சாறை இரு நாழிகைகளுக்கொரு முறை பணிப்பெண்கள் அளித்துக் கொண்டேயிருந்ததாலும், பின்புறத்து மூலிகைத் தோட்டத்திலிருந்து மூலிகை மணம் நிரம்பிய காற்றைத் தொடர்ந்து சுவாசித்ததாலும் அன்று மாலைப்



# பிரதமருக்கு ஒரு பகிரங்கக் கடிதம்!

மாண்புமிகு பிரதமர் ராவ் அவர்களுக்கு ஒரு சாமானியன் எழுதிக் கொண்டது.

மதிப்பிற்குரிய ஐயா! தாங்கள் எத்தனையோ தொழிற்சாலைகளைத் திறந்து வைத்து, அதை நாட்டிற்கு அர்ப்பணிப்பதை பேப்பரில் படித்திருக்கிறேன். ஆனால் நினைவாற்றலை அதிகரிக்கச் செய்யும் ஒரு மாத்திரையைத் தாங்கள் வெளியிட்டது எனக்கு மிகவும் கவலையைத் தருகிறது. மத்திய அரசின் அறிவியல் ஆய்வு மையக்கிளையானது மூலிகைகளிலிருந்து இதைத் தயாரித்து, தங்கள் மூலம் வெளியிட்டிருக்கிறது. நாடு இருக்கும் நிலையில் ஊழல், லஞ்சம், ஹவாலா, எல்லாவற்றையும் மக்கள் தெரிந்து கொண்டு குழம்பிப் போய் இருக்கிறார்கள். கடவுள் கொடுத்த ஞாபக மறதியால் ஜனங்கள் நாளாவட்டத்தில் இவைகளை மறந்து, மீண்டும் தங்களுக்கே வோட்டு அளிப்பார்கள்! ஆனால் இந்த மாத்திரையைச் சாப்பிட்ட பின், அவர்கள் ஞாபகம் அதிகமாகி இந்த ஊழலைப் பற்றியே நினைத்து சிந்திக்க ஆரம்பித்து, செயல்பட்டால் அது உங்களுக்கு நல்லதல்ல என்று நினைக்கிறேன்.

மறதி என்பது ஜனங்களுக்கு கடவுள் கொடுத்த வரப்பிரசாதம். இந்த மாத்திரையால் என்னென்ன வினையுமோ என்று அஞ்சுகிறேன்!

இப்படிக்கு,
உங்கள் பிரஜை,
எம் வெங்கடேஸ்வரன்,
திருநெல்வேலி.

பொழுதிலேயே இளவரசியின் மயக்கம் தெளியத் தொடங்கியிருந்தது. நீண்ட நேரமாக ஓய்வெடுத்துவிட்ட அவள் சித்தம் விழிப்பை நாடி கனவேகமாக இயங்கத் தொடங்கியதால் ஏதேதோ காட்சிகளை அவள் உள்ளம் உருவாக்கி அவள் கண்களுக்குள் காட்டிக் கொண்டிருந்தது. சூளாமணி விஹாரமும், பாண்டியர் தலைநகரும், உத்தமபாளையமும் மாறி மாறித் தோன்றியது மட்டுமின்றி அங்கங்கே நடந்த சம்பவங்களும் பலவிதமாக மாறிமாறித் தோன்றின.

அவள் விழிகளிலும் முகத்திலும் ஏற்பட்ட சலனங்களைக் கவனித்த பணிப்பெண்கள், மருத்துவர் கூறியிருந்தபடி மூலிகைச் சாற்றை அவள் இதழ்களை நீக்கிச் சிறிதும், மற்றொரு மூலிகைச் சாறை அவள் இமைகளை விலக்கி விழிகளிலும் விடவே, அடுத்த கால் நாழிகையில் இளவரசி கண் விழித்தாள். தான் ஏதோ ஒரு புதிய இடத்திலிருப்பதையும், தான் சந்தித்திராத புதிய பணிப்பெண்கள் எதிரில் நிற்பதையும் கண்டவளுக்கு ஒன்றும் புரியவில்லை.

மெல்ல எழ முயன்றவள், தன் உடலின் கனமே பெரும் சுமையாயிருப்பதையும், ஙககால்களின் இணைப்புகள் பெரிதும் பலவீனப்பட்டுக் கிடப்பதையும் உணர்ந்தாள்.

எதிரில் நின்ற பணிப்பெண்கள் அவள் நிலையை உணர்ந்து கொண்டிருக்க வேண்டும். அவளைத் தாங்கி மெல்ல அமர வைத்தவர்கள் ஒரு முறை தலைவணங்கினார்கள்.

இளவரசியிடமிருந்து பலவீனமான குரலில் கேள்வி ஒலித்தது. "யார் நீங்கள்? நான் எங்கிருக்கிறேன்? இந்தக் குடில் யாருடையது?"

இளவரசியின் கேள்விக்குப் பதிலளிக்க ஆரம்பித்த அந்தப் பெண்கள் அறை வாயிலில் ஏற்பட்ட அரவத்தைக் கேட்டு நிமிர்ந்தனர். நிமிர்ந்தவர்கள் விழிகளில் பெரும் திகில் பரவியது. அதைக் கவனித்த இளவரசியும் சிரமப்பட்டுப் பின்புறம் திரும்பி நோக்கினாள்.

உடல் முழுவதும் கம்பளியொன்றைப் போர்த்தியபடி உருவமொன்று வாயிலில் நின்றது. நடுவில் இலேசாக விலகியிருந்த கம்பளியினூடே அதன் கச்சையில் குறுவாளொன்றும் தெரிந்தது. இளவரசி திரும்பியதும் ஒரு முறை தலையசைத்த அந்த உருவம் ஓரடி முன்னால் எடுத்து வைத்தது.

அடுத்த கணம் 'வீலெ'ன்ற பணிப்பெண்களின் அலறல் அந்தக் குடிலின் பின்புறத்தில் கவிந்து கிடந்த இருளை ஊடுருவி வெகு தூரத்திற்குக் கேட்டது. மருத்துவர் இல்லத்திற்குச் சற்றுத் தள்ளி சோமகேசி நிறுத்தியிருந்த போசள வீரர்கள் மூவருக்கும் கூட அந்த அலறல் கேட்டது.

(தொடரும்)



# மீண்டும் சாவித்திரி

## மீண்டும் விசு!

ஸ்டில்லைப் பார்த்தாலே தெரியுமே - இரண்டு பெண்கள் - இருவர் கழுத்திலும் மஞ்சள் கயிறு: இரு ஜோடி கண்களிலும் வெளிப்படக் காத்திருக்கும் விழிநீர்... செண்டிமெண்ட் பாகு சொட்டும், கட்டெண்ணெயில் பொரித்த குலோப்ஜாமூன் சினிமா.

என்ன கதை...? விசுவின் 'பைத்தியக்கார டாக்டருக்குப் பைத்தியம் பிடிச்சா...' வசனத்தைத் தொடர்ந்து பத்து முறை சொல்வதுபோல் எக்கச்சக்கமாய் சிடுக்கு விழுந்த ரிப்பன் பகோடா!

ஆரம்பம் என்னவோ அழகாக, இயல்பாகத்தான் இருக்கிறது. ஊருக்கு உபகாரியான ஊதாரி அப்பா. அன்புடன் அவரை வம்புக்கிழுக்கும் மகள் ரேவதி. இருவருக்குமிடையேயான ஸ்பெஷல் பிரான்ட் உறவு.

விசு ரேஷன் கார்டு விவரத்தைச் சொல்லி வழியும் போதும் ரேவதி மணமகள் தேவை விளம்பரத்தைப் படிக்கும் போதும் நடிப்பை ரசிக்க முடிகிறது.

அட! தமிழ் சினிமாவில் இப்படி கதையுடன், வசனமும் பாத்திரப் படைப்பும் இழைந்து, குங்குமப்பூ கலந்த மலபார் பால் பாயசம் போல் குழைகிறதே என்று கொஞ்சம் அசந்து போகிறோம்.

பிரச்னை என்னவெனில் அதற்கப்புறம் விசுவும் அசந்துபோய் பால் பாயசத்தைக் கிண்டாமல் விட்டுவிட்டார். அது செமத்தியாகத் தீய்ந்து போய் பாத்திரத்துடன் ஒட்டிக் கொள்ள, சுரண்டி எடுத்துச் சுத்தம் செய்வதற்குள் அவர் மட்டுமல்ல... நாமும் திணறிப் போகிறோம்.

வித்தியாசமான பெண் பாத்திரமாக ரேவதியை அறிமுகப்படுத்திவிட்டுக் கடைசியில் வழக்கமான தாலி டயலாக் பேச வைத்து வாழாவெட்டி என்று முத்திரை குத்திக் கொச்சைப்படுத்திய விசுவை எந்தக் கொப்பரையில் போடலாம்...?

கதையை முன்பே படிக்காதது நம் தப்பு. படித்திருந்தால் தலைவலி, அட்மிஷன் என்று சாக்குச் சொல்லி அரை நாள் லீவு கேட்டு விமர்சனப் பொறுப்பிலிருந்து நழுவியிருக்கலாம்.

படத்தை வெகுவாக ரசித்தவர் : பக்கத்து சீட்டி லிருந்த பெண்மணி - அவருக்கு மறுபக்கத்தில் அவரது பாய்ஃப்ரெண்ட் அமர்ந் திருந்ததால்...

சே! தட்டி தட்டி கையே வீங்கிப் போச்சு, நான் போறேன்...

1996 மார்ச் 17
யுவ பங்குனி 4
மலர் : 54
இதழ் : 33

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# ஹவாலா வேட்பாளர்கள்!

"ஒருவர் பேரில் குற்றச்சாட்டுகள் உள்ளன என்பதாலேயே அவர் குற்றவாளி ஆகி விடமாட்டார். நீதிமன்றத் தீர்ப்புதான் அவர் குற்றவாளியா அல்லவா என்று நிர்ணயிக்கும். எனவே ஹவாலா வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர்களுக்குத் தேர்தலில் நிற்க அனுமதி மறுக்க முடியாது..." - இது பாரதப் பிரதமர் நரசிம்மராவின் சமீபத்திய 'சத்தான' வாதம்!

நீதிமன்றம் ஒருவரை நிரபராதி என அறிவிக்கும்வரை, அவர் குற்றவாளியென ருசுவாவதற்கான சாத்தியக் கூறுகள் இருக்கின்றன என்பதை முற்றிலும் மறந்துவிட்டுப் பேசுகிறார் பிரதமர். அவ்வாறு அவரைப் பேச வைக்கும் அரசியல் கட்டாயங்கள் ஆயிரம் இருக்கலாம். ஆனால் அவரது வாதத்தின் அடிப்படையான தார்மிகத் தவறை எந்தக் காரணமும் சரிகட்ட முடியாது.

ஹவாலாவும் இன்ன பிற ஊழல்களும் வெடிப்பதற்கு அடிப்படையான காரணம் அபரிமிதமான தேர்தல் செலவுகள்தான். இதை நாடே உணர்ந்திருக்கும் நேரத்தில், தலைமை தேர்தல் கமிஷனர் சேஷன் விடுத்துள்ள கோரிக்கை கவனத்தைக் கவர்கிறது.

'ஒரு வேட்பாளர் தேர்தலுக்குச் செலவழிக்க அனுமதிக்கப்பட்டிருக்கும் தொகை மிகக் குறைவு. காலத்துக்கேற்ப அதை உயர்த்தி அமைக்க தேர்தல் கமிஷன் தயாராகத்தான் இருக்கிறது' என்கிறார் சேஷன். ஆனால், வேட்பாளரின் தனிச் செலவுக்கு மட்டுமே உச்சவரம்பு உள்ளது. கட்சியோ, பிற நண்பர்களோ அவருக்கென செலவழிக்கக்கூடிய தொகைக்குத்



தற்போது எந்த உச்சவரம்பும் இல்லை. அதற்கொரு உச்சவரம்பு விதிக்க, பாராளுமன்றம்தான் தேர்தல் சீர்திருத்தங்களைக் கொண்டு வரவேண்டும் என நினைவூட்டி, அச்சீர்திருத்தங்கள் செய்யப்படாதவரை வேட்பாளரின் செலவு உச்சவரம்பை மட்டும் உயர்த்துவதில் அர்த்தமில்லை என்றும் கூறுகிறார்.

இந்த வாதம் மிக நியாயமானதே. ஒரு வேட்பாளருக்காக அவரது கட்சி, பிற தனி நபர்கள் எனப் பல தரப்பிலும் செய்யப்படும் செலவுகளுடன் அவரே சுயமாகச் செய்யும் செலவையும் ஒன்று சேர்த்து, மொத்தத் தொகைக்குமாக ஓர் உச்சவரம்பு நிர்ணயிக்கப்பட வேண்டும் என்ற சேஷனின் யோசனையை வரவேற்கலாம்.

ஆனால் அந்த உச்சவரம்பை உயர்த்த உயர்த்த, தாம் செலவழித்ததைப் போல் பல மடங்கு திரும்பச் சம்பாதிக்கும் வெறி வேட்பாளருக்கும் அவரது ஆதரவு கூட்டத்துக்கும் அதிகரித்துக்கொண்டே போகும். மீண்டும் லஞ்ச-ஊழல் வட்டத்துக்குள்ளேயே உழலத்தான் இது வழி வகுக்கும்.

தேர்தல் செலவுகளைக் கடுமையாகக் குறைத்து, தெருவோரக் கூட்டங்கள், வீடு வீடாகச் சென்று வாக்கு கேட்டல் போன்ற எளிய பிரசார முறைகளை மட்டுமே மேற்கொள்ளச் செய்வது தான் அரசியலைத் தூய்மைப்படுத்துவதற்கான வழி.

இதை நடைமுறைப்படுத்தும் வகையில், தேர்தல் சீர்த்திருத்தங்கள் செய்யப்பட வேண்டும் என்பது ஒவ்வொரு முறையும் தேர்தல் நெருங்குகையில் மட்டுமே விவாதிக்கப்படுகிறது. புதிய ஆட்சி அமைக்கப்பட்டதும் இது அடியோடு மறக்கப்பட்டு, பரணில் தூக்கிப் போடப்படு கிறது.

வரவிருக்கும் தேர்தலிலாவது, தேச நலனில் உண்மையான அக்கறை கொண்ட கட்சிகள், தேர்தல் சீர்திருத்தங்களைத் தங்கள் வாக்குறுதிப் பட்டியலில் முதன்மையாக இடம் பெறச் செய்யட்டும்.

அவ்வாறு செய்யும் கட்சி குற்றம் சுமத்தப்பட்டவர்களுக்கும், குற்றவாளிகளெனத் தீர்ப்பு அளிக்கப்பட்டவர்களுக்கும் தேர்தலில் போட்டியிட டிக்கெட் தர முடியாது போகும். இந்த




வாக்குறுதியைத் தரும் கட்சியை, பாரதமே திரண்டெழுந்து ஆதரித்து, ஆட்சியில் அமர்த்தலாம். அத்தகைய தார்மிக பலம் எந்தக் கட்சிக்கு இருக்கிறது?

# ரஜினிக்கு வாழ்த்து!

காங்கிரஸ் தலைமைக்குத்தான் நன்றி சொல்லவேண்டும். 'அரசியலில் இறங்கி எந்த வொரு கட்சிக்கும் ஆதரவு அளிக்கப் போவதில்லை' என ரஜினிகாந்த் மனங்கசந்துபோய் முடிவெடுக்க, காங்கிரஸ் தலைமையின் மசமசப்புதானே காரணம்!

ரஜினியின் அரசியல் பிரவேசம் குறித்து முன்பு நாம் எழுதிய தலையங்கத்தில் (6.8.95 இதழ்) அரசியல் வேறு, சினிமா வேறு; நடிப்பு வேறு, நிஜம் வேறு என்பதைச் சுட்டிக் காட்டியிருந்தோம். கடைநிலைத் தொண்டராகத் தொடங்கி, படிப்படியாகப் பயிற்சி பெற்று முன்னேற வேண்டிய களம் அரசியல். சினிமா உலகில் விலைபோகும் தோற்றமும் ஸ்டைலும் மட்டுமே ஒருவரை வெற்றிகரமான அரசியல்வாதியாக்கிவிட முடியாது. அந்த ஆளுமையையும் புகழையும் பயன்படுத்தி திடீரென்று அரசியலுக்கு வந்தவர்கள் நல்லாட்சியாளர்களாகப் பிரகாசித்த வரலாறே கிடையாது என்று எடுத்துக் காட்டியிருந்தோம்.

அரசியலுக்கு வெளியே இருந்தபடி ஒரு கட்சியைத் தேர்ந்தெடுத்து ரஜினி தமது ஆதரவை அளிக்க வேண்டும் என்றும் கூறியிருந்தோம்.

இப்போது அதற்கேற்பவே முடிவெடுத்துள்ளார் ரஜினிகாந்த்.

தமிழ்நாட்டு அரசியல்வாதிகள் இந்த விஷயத்தை இதோடு விட்டுவிடமாட்டார்கள். ஒவ்வொரு கட்சியும் ரஜினியைத் தமது வட்டத்துக்குள் இழுத்து ஆதரவு பெற தொடர்ந்து முயற்சி செய்யும். அவர்கள் இழுப்புக்கு வளைந்து கொடுக்காமல் அவர் தொடர்ந்து உறுதியுடன் இருக்க வேண்டும்.

# 1 கனாக் கன

புதுதில்லி ரயில்வே ஸ்டேஷனில் எனக்காக ஏ.வி. ராஜகோபால் காத்திருந்தான். சட்டைக்கு மேல் ஸ்வெட்டர், அதற்கு மேல் ஜெர்க்கின், காதுக்கும் தலைக்குமாக மப்ளர், கைகளுக்கு கிளவுஸ், நிலக்கரி சுரங்க நபர் போல் தடித்த ஷூவெல்லாம் மாட்டிக் கொண்டு, சட்டென்று பார்க்க அடையாளம் தெரியவில்லை. கம்பளி மூட்டைகளாக மக்கள் முண்டியடித்துக் கொண்டிருக்க, அரைக்கை சட்டை, பேண்ட்டில் நான் மட்டும் அசல் அசடாக இருந்தேன். குளிர் எலும்பை உடைக்க, நல்ல வேளை ராஜகோபால் கூடுதலாக ஒரு ஜெர்க்கின் கொண்டு வந்திருந்தான். கொசுறாக, "தெரியும். இப்படி நிர்வாணமா வந்து நிற்பாய் என்று எதிர்பார்த்தேன்!" என்ற கமெண்ட் வேறு.

கொஞ்சம் சிரித்து விட்டு, "எப்படி இருக்கே?" என்றேன்.

"நீ பார்க்கிறபடிதான். குளிர் காலத்தில் இழுத்துப் போர்த்திண்டு, வெயில் அடிச்சா, அவிழ்த்துப் போட்டுட்டு, மழை பெய்தால் கதவைச் சாத்திட்டு... எட்டாயிரம் சம்பளம் தரான். எருமை மேய்க்கச் சொன்னால் கூடத் தயார். டெல்லி எருமை!"

ராஜகோபால் புன்னகை மன்னன். நடந்த வாக்கில் ஒயிலாகத் திரும்பி ஒரு ஸ்மைல். என் பெட்டிகளில் ஒன்றை வாங்கியபடிக்கு, "வாட் அபவுட் யூ?" என்றொரு கேள்வி.

"அதே போலத்தானா? 'உங்கள் மேனி எழிலின் ரகசியம் என்ன, மாண்புமிகு மனிஷா தேவி அவர்களே' வா?"

"சேச்சே. இப்போ வெகு நல்ல முன்னேற்றம். அரசியல் நிருபராகி விட்டேன் தெரியுமா?"

"சுத்தம். இதற்கு அதுவே பெட்டர். நல்லது. என்ன விஷயமா திடீர் தில்லி விஸிட்?"

"ஒரு கருத்துக் கணிப்பு."

"என்னது?"

"சங்கராந்திக்கு எங்க பாட்டி தராப்பலே. ஜெயின் சாப் ஒருத்தர் பாக்கி வைக்காமல் எல்லா அமைச்சருங்களுக்கும் சேவிக்க வெச்சி, பணம் குடுத்திருக்கார். 'இன்னிக்கு நான்; நாளைக்கு நீ'ன்னு குல்லாக்காரன் ஒவ்வொருத்தனா கால் கடுதாசி எழுதிக் குடுத்திட்டிருக்கான். எலக்ஷன் வருது இல்லையா? இந்த நிமிஷம் தலைநகரில் நரசிம்மராவுக்கு என்ன செல்வாக்குன்னு ஒரு சர்வே. சின்ன லெவல்தான். இருபது ஏரியா. ஏரியாவுக்கு ஐம்பது பேர்."

"இந்தி வரும்ா உனக்கு? ஒரு பயல் இங்கிலீஷ் பேசமாட்டான், தெரிஞ்சால் கூட!"

நான் பெட்டியைக் கீழே வைத்து விட்டு, இரண்டு கைகளையும் ஹரிதாஸ் கிரி போல் உயரத்தூக்கி, 'ஸாரே ஜஹான் ஸே அச்சா; இந்துஸ்தான் ஹமாரா!' என்றேன்.

"எதேஷ்டம்!" என்றான் ராஜகோபால்.

ஸ்டேஷனை விட்டு வெளியே வந்ததும் கைதட்டி ஆட்டோ கூப்பிட்டு, 'கல்காஜி எக்ஸ்டென்ஷன் சலே' என்று ஏறிக் கொண்டோம். பனியில் மூழ்கி, ஆட்டோ நகரத் தொடங்கியதும், "இன்விடேஷன் வந்தது. ஸிங், லீவ் தர மாட்டேனுட்டான். அதான், உன் கல்யாணத்துக்கு வர முடியலை. எழுதி இருந்தேனே? சொல்லு. எப்படி இருக்கு, உன் புருஷ வாழ்க்கை?" என்றான்.

அவனுக்கு, என்னை - என் கனவுகளுடன் முழுசாகத் தெரியும். ஒரு சாதாரணனின் கனவுகள். லஸ் கார்னர் செலக்ட் ஓட்டலில் பலான



# டன் தோழீ...

வாசனைகளைச் சகித்துக் கொண்டு, வெறும் டீயாகக் குடித்தபடிக்கு ஆசைகளைச் சொல்லி இருக்கிறேன்.

பெண். இந்த இரண்டு எழுத்துக்கு நான் வைத்திருந்த டெஃபனிஷனை வார்த்தைகளில் கோக்க முடியாது. வெகு அழகு வேணுமென்று அவசியமில்லை. ஒரு ஈர்ப்பு இருக்க வேண்டும். எதிர்ப்படுகிறபோதெல்லாம் யாரும் இசைக்காத ஒரு சங்கீதம், நினைவில் சுழன்று எழ வேண்டும். சின்னதான குரல். எண்ணி எண்ணி உதிர்க்கிற சொற்கள். சீண்டல் அவசியமில்லை. சிணுங்கல் முக்கியம். செல்லச் சிணுங்கல். நிற்கிற, நடக்கிற, பார்க்கிற, சிரிக்கிற பாவனையில் ஒரு லயம் வேண்டும். சமையல் தெரிந்தால் சந்தோஷம். இலக்கியம் தெரிந்தால் விசேஷம். நாலாயிரம் சம்பளம். வாரம் ஒரு சினிமா. வழியில் கொக்ககோலா. வீட்டுக்குப் போய் ரசம் சோறு. விசிறிக்குக் கீழே, விடி விளக்கு வெளிச்சத்தில் மெத்தென்று ஒரு முத்தம்.



ரேணுகாவைப் பார்த்துவிட்டு, ஸ்ரீரங்கத்திலிருந்து அப்பா உருகி லெட்டர் எழுதி இருந்தார். அவருக்குப் பிடித்திருக்கிறது. வீடு பெங்களூரில் என்பது தவிர வேறு நெருடல் இல்லை. ஆனால் தூரம் முக்யமில்லை. மனுஷர்கள் முக்யம். பெங்களூர் போன்ற ஒரு நாகரிக நகரில், இத்தனை ஆசாரக் குடும்பம் இருப்பது அவருக்கு ஆச்சர்யமாக இருக்கிறது. அவள் கோலம் ரொம்ப அழகாகப் போடுகிறாள். சின்ன வயதில், ரங்கோலி வகுப்புகளில் ஆர்வம் காட்டி இருக்கிறாள். லக்ஷ்மி அஷ்டோத்திரம் தெரிந்திருக்கிறது. ரஸகுல்லா செய்யத் தெரிந்திருக்கிறது. கால்காசு ஆனாலும் கவர்மெண்ட் காசு என்பது போன்ற மௌடீகங்கள் அவர்களிடம் இல்லை. ஒரு பத்திரிகையாளனை மாப்பிள்ளையாக அடைவதில் அவர்களுக்குப் பெருமைதான். இந்தக் கல்யாணம் நடந்தால் அவருக்குச் சந்தோஷம். என் போட்டோவை அவர்கள் பார்த்தாகி விட்டது. ரேணுகாவின் போட்டோ, கடிதத்துடன் இணைத்திருக்கிறது. உடன் பதில் போட்டால் அப்பாவுக்குச் சந்தோஷம்.

கல்யாண வயதில், காணக் கிடைக்கிற போட்டோ முகங்கள் அத்தனையும் அழகாகத்தானே தெரிகின்றன? 'உங்களுக்குப் பிடித்திருந்தால் சரி; எனக்கும் அவ்வண்ணமே' என்று அப்பாவுக்கு பதில் எழுதினேன்.

ஒரு வாரம் கழித்து, ஒரு ஞாயிறு காலை பிருந்தாவன் பிடித்து, பெங்களூர் போய், சிவாஜி நகரில் சரோஜா தேவி வீட்டை அடுத்த அவர்கள் வீட்டை அடைந்து அறிமுகப்படுத்திக் கொண்டு காப்பி சாப்பிட்டேன். ரேணுகாதான் கொண்டு வந்தாள்.

இயல்பில் நான் கொஞ்சம் கூச்சமானவன். கனவுகளோடே அதிகம் புழங்குபவன். பாடல் காட்சிகளின் அழகிய பொய்மையை திருட்டு ஆர்வத்துடன் ரசிப்பவன். பெண்களைப் பற்றி ஒருவித பிரமிப்பு கொண்டவன். என்னவென்று தெரியாத பிரமிப்பு. பிரமிப்பு மிகும்போதெல்லாம் தலை கவிழ்ந்து கொள்பவன். 'இத்தனை வெட்கம் இந்தத் தொழிலுக்கு ஆகாது' என்று ஒரு தரம் என் எடிட்டர் சொல்லி இருக்கிறார்.

**பா. ராகவன்**

அப்போதும் தலை கவிழ்ந்துதான் இருந்தேன்.

தைரியமாகக் கேள். கொஞ்சம் அவளுடன் தனியாகப் பேச வேண்டும் என்று சொல்லு. தப்பு இல்லை. அடிப்படையான கருத்துக்களில் ஒத்துப் போகிறாளா என்று தெரிந்து கொள்ள வேண்டியது வெகு முக்யம். கடித்தா சாப்பிட்டு விடப் போகிறார்கள்? போல்டாகப் பேசு என்று ஊரிலிருந்து என் தம்பி அஞ்சு நிமிடம் எஸ்.டி.டியில் உபதேசம் செய்திருந்தான். சின்னவர்களுக்கு நிறையவே தெரிந்திருக்கிறது. அப்போது, இத்தனை ஏன் எனக்குத் தெரிந்திருக்க வில்லை? 'கார்ப்பரேஷன் ஸ்கூலில் படிச்சிருந்தால் தெரிஞ்சிருக்கும். உன்னை எவன் சர்வோதயாவில் சேரச் சொன்னான்?' என்று என் தம்பி கேட்டான்.

ரேணுகாவோடு அன்று நான் கடைசி வரை ஏதும் பேசவில்லை. இயல்பான அசைவுகளால் மனத்தில் நிறைந்து, பிடித்துப் போனாள்.

அவர்களிடம் என் சம்மதத்தைச் சொல்லி விட்டு, ரயிலேறி திருச்சி போய், பஸ் பிடித்து ஸ்ரீரங்கத்தில் இறங்கி, அப்பா, அம்மாவிடம் விஷயம் சொல்லி, சந்தோஷத்துடன் சர்க்கரையைச் சேர்த்துக் கொட்டி அம்மா கிளறிய கேஸரியை அள்ளி அடைத்துக் கொண்டு, அடுத்த பஸ்ஸில் சென்னை வந்து, ஆபீஸ்.

அடுத்த மாதம் திருமணம். ஸ்ரீரங்கத்திலிருந்து சுற்றமும் சென்னையிலிருந்து நட்புமாக இரண்டு நாள் பெங்களூரில் முகாம். தாலி கட்டி, ரேணுகாவைக் கூட்டிக் கொண்டு, உடன் சென்னை வந்தேன்.

முதலிரவில் கூட அதிகம் அவளுடன் பேசவில்லை. அறைக்கு வெளியே, தொண்டை வரண்ட சொந்தக்காரர்களின் சங்கீத இம்சை. புதிய அனுபவத்தில், எப்படித் தொடங்குவது என்று தெரியாமல், "ராமகிருஷ்ண ஹெக்டேவுக்கு உங்கள் ஸ்டேட்டில் இப்போ பப்ளிக் சப்போர்ட் எப்படி?" என்று அபத்தமாகத் தொடங்கினேன்.

அவள் பதில் சொல்லவில்லை. தலை நிமிர்த்தி, என்னை ஒரு பார்வை. மறுபடி தலை கவிழ, கட்டிலோரத் துணி திருகல். 'அ, வெட்கம்!' என்று நினைத்துக் கொண்டேன்.

"ஃபர்ஸ்ட் நைட்டில் பாலிடிக்ஸ் பேசக் கூடாதுன்னு சட்டம் ஒண்ணும் இல்லை. ஆனால், அவுட்-டேட்டட் பாலிடீஷியன் பற்றி ஆரம்பிச்சதா சொன்னாய் பார். உன்னை என்ன பண்றதுன்னு தெரியலைடா!" என்றான் ராஜகோபால்.

குளிரில் ஏகதேசம் என் விரல்கள் பனிக் கட்டிகளாகி இருக்க, சோழவரம் ரேஸ் மாதிரி ஆட்டோக்காரன் வளைந்து வளைந்து போய்க் கொண்டே இருந்தான்.

"ராஜகோபால், எனக்குக் குளிர் தாங்கலை. உன் வீடு எவ்ளோ தூரம்? நீ தில்லியில்தான் இருக்கியா? அல்லது பாகிஸ்தானா?"

"சேச்சே! வந்தாச்சு. உன்னை நிஜாமுதீனிலேயே இறங்கச் சொல்லி இருக்கணும். அங்கே இருந்து கல்காஜி பக்கம். நியூடெல்லி ஸ்டேஷனில் இருந்துன்னா, கொஞ்சம் தூரம்தான்."

நேரு பிளேஸ் தாண்டி, கோவிந்த்புரி மெயின் ரோடைக் கடந்ததும் "ஆகே லெஃப்ட் சலே பாய்ஸாப்" என்றான் ராஜகோபால்.

"பார், உனக்கு உபஹார் தியேட்டர் அருகில் ரூம் போட்டிருக்கேன். இருநூற்று எழுபது ரூபா வாடகை, ஒரு நாளைக்கு. தாங்குமில்லையா, உன் பத்திரிகை? இன்று மட்டும் காலை என் வீட்டில் சாப்பிடு. நானும் அவளும் எட்டரைக்குக் கிளம்பிப் போனால் ஆபீஸ் முடித்து வர இரவாகி விடும். உனக்காக, இன்று அரை நாள் லீவ் எடுத்திருக்கிறோம்" என்றான்.

ராஜகோபால் போன்ற ஒரு நண்பன் கிடைத்தது எத்தனை அதிர்ஷ்டம்!

கொத்துக் கொத்தாக முளைத்திருந்த கான்கிரீட் உயரங்களில் ஏறி, ஒரு கதவைத் தட்டி, "ஹமே ஆகயா" என்றான் ராஜகோபால்.

"முழு இந்திக்காரனாகவே ஆயிட்டியா?" என்றேன்.

"பூவாவுக்கு வேற வழி?"

ராஜகோபாலின் மனைவி கதவைத் திறந்து, என்னைப் பார்த்து "வாங்க" என்று முகம் நிறையக் கூப்பிட்டாள். மூன்று வருடங்களுக்கு முன் அவன் கல்யாணத்தன்று பார்த்ததுதான்.

சாதாரணமாகக் கல்யாண தினங்களில் பெண்களின் நிஜ உருவம் காணமுடிகிறதில்லை. கல்யாணத்துக்கென்று தனி உருவம். தனித் தோற்றம். தனிச் சிரிப்பு. தனி வெட்கம்.

"உக்காருங்க. இதோ வரேன்" என்று உள்ளே போனாள்.

சின்ன ஃப்ளாட்தான். பெட்ரூம் அளவுக்கு ஒரு ஹால். பாத்ரூம் அளவுக்கு ஒரு பெட்ரூம். லிஃப்ட்-அவுட் அளவுக்கு கிச்சன். மாடிப்படி பொந்து போல் பாத்ரூம். கட்டில், டீ.வி. மேலெல்லாம் துணிகள் குவிந்திருக்க, தரை ஈரத்துக்குக் கோணி போட்டிருந்தது.

வெளிச்சம் இல்லாமல் விளக்கைப் போட்டுக் கொண்டு, ராஜகோபால் இந்துவைப் பிரித்தான். காப்பியைக் கொண்டு வந்தபடிக்கு அவன் மனைவி, "ஹவ் இஸ் யுவர் மாரீட் லைஃப்?" என்றாள் என்னைப் பார்த்து. சில சந்தர்ப்பங்களைத் தவிர்க்கவே முடியாது. ஆனால் ஏன் என்னால் சட்டென்று ஒரு பதில் சொல்ல முடியாமல் போகிறது? நான் மையமாகச் சிரித்து விட்டு, தலை கவிழ்ந்து கொண்டேன்.

"இத்தனை வெட்கமா? உருப்படமாட்டாய்!" என்றான் ராஜகோபால்.

கல்யாணம் முடிந்து, சென்னை வந்த மறு நாளே நான் ஆபீஸ் போக வேண்டி இருந்தது. கடற்கரையில் பி.ஜே.பி. பொதுக் கூட்டம். அத்வானி வருகிறார். அடல் பிஹாரி வாஜ்பாய் வருகிறார். கோவிந்தாச்சார்யா வருகிறார்.

"கூட்டத்துல பேசறதெல்லாம் நியூஸ் பேப்பர்ல போட்டு விடுவான். அது ஒண்ணும் வீக்லிக்குத் தாங்காது. பேட்டி தனியா கிடைக்குமா பார்" என்றார் எடிட்டர்.

ரேணுகாவிடம் மன்னிப்பு கோரும் பாவனையில் சொல்லிவிட்டு, விடிந்ததும் எழுந்து ஓடினேன்.

நாள் முழுக்க பார்ட்டி ஆபீஸ், ஹோட்டல், கடற்கரை சீரணி அரங்கம் என்று அலைந்து விட்டு, இருட்டி, விடிகிற நேரம் வீடு வந்து கதவைத் தட்டினேன். தூக்கக் கண்களுடன் ரேணுகா எழுந்து வந்து கதவைத் திறந்தாள்.

"ஸாரி."

"எதுக்கு?"

"எல்லாத்துக்கும்தான்."



"பெண்ணுக்குப் பாட வரும்... ஆட வரும்... மாப்பிள்ளைக்கு?"

"நல்லா ஓட வரும்!"

— அம்பை தேவா

அவள் பதில் பேசவில்லை. போய் விட்டாள்.

நேரம், காலம் கணக்கின்றிச் சுற்றுகிற உத்தியோகம். யோசிக்காமல் என்னை மணந்து கொண்டு விட்டது பிசகு என்று நினைக்கிறாளா? நான் ரேணுகாவிடம் கேட்டேன். அவள் பதில் சொல்லவில்லை. படுக்கையில் உட்கார்ந்தபடிக்குக் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். அப்பா சிலாகித்திருந்த ரங்கோலிக் கோலம். கன்னத்தில் கையூன்றி நான் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

"பரவாயில்லைடா. யூ ஆர் லக்கி." என்றான் ராஜகோபால். நான் சிரித்துக் கொண்டேன்.

"குளிச்சிட்டு வர்றீங்களா? சாப்பிட்டுடலாம்?" என்றாள் அவன் மனைவி.

நான் எழுந்து கொண்டேன்.

"சாப்பிட்டு, ரெஸ்ட் எடு. நான் ஆபீஸ் கிளம்பும் போது உன்னை, உன் லக்கேஜை ஹோட்டலில் விட்டு விடுகிறேன். இரவு வந்து பார்க்கிறேன்" என்றான் ராஜகோபால்.

"உங்களை இங்கயே தங்கச் சொல்ல ஆசைதான். ஆனால், ஃபார்மாலிட்டிக்காகக் கூடச் சொல்ல முடியாதபடிக்குச் சின்ன ஃப்ளாட். ஹாலில் படுத்துக்கலாம்தான். ஆனா இது போல் குளிர் காலத்தில் வெகு கஷ்டம். ஹீட்டர், ரஜாய் இல்லாமல் ஜன்னி வந்துடும்."

ராஜகோபாலின் மனைவி இயல்பாகத்தான் சொன்னாள். வெளிப்படையாக அப்படிப் பேசியது எனக்குப் பிடித்திருந்தது. ரேணுகா கூட இப்படித்தான். வெகு வெளிப்படை.

அன்று ஆபீஸில் வேலை குறைவு. வெளி வேலை ஏதும் இல்லாததால் மூன்று மணிக்குக் கிளம்பி, சல்லென்று பத்து நிமிஷத்தில் வீடு. முன்னதாக ஆபீஸ் பையனிடம் சொல்லி, உதயத்தில் மாலைக் காட்சிக்கு இரண்டு டிக்கெட். ரேணுகாவுடன் முதல் முதலாகப் போகப் போகிற சினிமா.

வீட்டு வாசலில் புதுச் செருப்பு இருந்தது. யாரோ வந்திருக்கிறார்கள். கடவுளே, என் திட்டங்கள் எல்லாமே ஏன் செயல்வடிவம் பெறாமல் போய்விடுகின்றன?

இல்லை. சினிமாவுக்கு நிறைய நேரம் இருக்கிறது. அரவிந்த் இன்னும் கால் மணியில் கிளம்பி விடுவான் என்று ரேணுகா சொன்னாள்.

"அரவிந்தைத் தெரியுமில்லையா? கல்யாணத்துக்கு வந்திருந்தான்."

கல்யாணத்தில் பார்த்த முகங்களில் எனக்கு எதுவும் ஞாபகம் இல்லை. அவள் அப்பா, அம்மா முகங்களைத் தவிர. ஆயினும் வழி இல்லை. வலிந்து புன்னகைத்து, 'ஹலோ' என்றேன்.

ரேணுகா எழுந்து சமையல் அறைக்குப் போனாள். ஆக, நான் அவனை எங்கேஜ் பண்ண வேண்டியது கட்டாயம்.

"சொல்லுங்கள். நீங்கள் என்ன செய்கிறீர்கள்?"

"பெங்களூரில் ரேணுகாவுடன்தான் காலேஜில் படித்தேன். அப்புறம் கேட்டரிங் டெக்னாலஜிக்கு மாறி, தற்சமயம் நொய்டாவில் ஒரு ஃபாஸ்ட் ஃபுட் கடை வைத்திருக்கிறேன்."

நொய்டா. பெயர் அழகாக இருக்கிறது. ஊர் எங்கே இருக்கிறது? கேட்க ஆசைதான். ஆனால் கேட்கவில்லை.

"மெட்ராஸில் ஏதும் வேலையாக வந்திருக்கிறீர்களா?"

காப்பிக் கோப்பைகளுடன் வந்த ரேணுகா, இருவரிடமும் நீட்டிவிட்டு என் அருகில் உட்கார்ந்தாள். நேராக என் கண்களைப் பார்த்து, "தெரியுமா? அரவிந்தை நான் ஆறு வருஷங்கள் காதலித்திருக்கிறேன்!" என்றாள்.

(தொடரும்)

# வீடு கட்டும் லட்சியம் நிறைவேறும் தருணம்.

வீடு கட்ட வேண்டும் என்பது விசுவத்தின் நீண்ட நாள் லட்சியம். இந்த லட்சியப் பூர்த்திக்கு எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டார். பலவாறாகப் பாடுபட்டு வீட்டைக் கட்டி முடிக்கும் தருணம். பூச்சு வேலைக்குப் பணமில்லாமல் போயிற்று. பணம் புரட்டும் எல்லா வழிகளையுமே ஏற்கெனவே பயன்படுத்தியாகிவிட்டது. இப்போது இந்தச் செலவுக்குப் பணம் திரட்டுவது எப்படி? யோசித்தபோது ஒரு பாதை இன்னும் திறந்திருப்பது தெரிந்தது. தாம் சேர்ந்திருந்த ஸ்ரீராம் சிட்டை இந்தத் தேவைக்குப் பயன்படுத்திக் கொண்டார்.

வெளி ஆதரவையோ, உதவியையோ நாடவேண்டிய அவசியமின்றித் தங்கள் பணத்தைக் கொண்டே தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் கௌரவமான பாதை ஸ்ரீராம் சிட்டு.

உடனடியாகத் தேவைப்படும் நிதியைப் பெற்று, அதனைச் சுலபமான மாதத் தவணைகளில் திருப்பிச் செலுத்துவதற்கு ஸ்ரீராம் இணையற்ற சாதனம். இன்றைய தேவைகளைப் பூர்த்தி செய்ய, நாளைய சேமிப்பு இரண்டுக்கும்.



ஸ்ரீராமின் சித்திரை கோலாகலம்

ஏப்ரல் 4-13, 1996

# பூச்சு வேலையைச் சமாளிப்பது எப்படி?

குடும்பச் செலவுகள், உயர்கல்வி, மருத்துவச் செலவுகள், சொந்தமாக வீடு, திருமணம், வர்த்தகம், செலுத்த வேண்டிய வரிகளுக்குத் திட்டமிடுவது போன்ற எத்தனையோ விதமான வாடிக்கையாளர்களின் தேவைகளை 23 ஆண்டுகளாக் பூர்த்தி செய்து வரும் நிறுவனம் ஸ்ரீராம் சிட்ஸ்.

11 லட்சம் சந்தாதாரர்களைக் கொண்டுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் ஒரு வலுவான மக்கள் இயக்கம். இதன் ஆண்டு வர்த்தகம் ரூ. 750 கோடி. அதன் பக்க பலமாக விளங்குபவை ரூ. 1000 கோடி மதிப்புள்ள ஸ்ரீராம் நிறுவனங்கள். அன்றாட பட்டுவாடா ரூ. 2 கோடி. ஆண்டு முழுவதும் ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான வாடிக்கையாளர்கள் பலனடைகிறார்கள்.

அதேபோல் நீங்களும் பலன் அடைய ஓர் அரிய வாய்ப்பு - ஸ்ரீராம் சித்திரை சீட்டுவிழா!




**ஸ்ரீராம்** சிட்ஸ் &

இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்.

நிர்வாக அலுவலகம்: "சுப்பிரமணியம் பில்டிங்,"
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன் : 8520700/8523932/8522651/
8525536/8520797

ADWAVE/SCI/5281

## ஸ்ரீராம் சிட்ஸ் - உங்கள் வளமைக்குப்பாதை.

அன்றாட மிடில் கிளாஸ் வாழ்வில் சிக்கல் சிடுக்குகள், கோபதாபங்கள், சொற்போர், முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு மூக்கை உறிஞ்சுதல் எல்லாம் சர்வ சாதாரணம். கணவன், மனைவியிடையே பிரச்னைகளற்ற, சண்டை இல்லாத, ஐஸ் கட்டி போல் ஸ்மூத்தான தினசரி வாழ்க்கை சாத்தியமே இல்லையா?

'ஏன் இல்லை?' என்று உக்கிரமாகக் கேட்கிறார்கள் இவர்கள். சராசரி குடும்பத் தலைவர்களாக வாழ்வைத் தொடங்கி, சங்கீதம் போல் சுகமாக இன்று வாழ்வதாகச் சொல்கிறார்கள். அந்த 'சுகம்' சாத்தியமாக இவர்கள் கடைப்பிடித்த ஐடியாக்கள் என்னென்ன?

சீதா-ஆராவமுதன் :

ஒரு தரம் சிறிய அளவில் எங்களுக்குப் பண நெருக்கடி ஏற்பட்டது. கடன் வாங்கிச் சமாளிக்க, மேலும் கொஞ்சம் கூடியது. மறுபடி கடன். மறுபடி நெருக்கடி என்று ஒரு கட்டத்தில் கடன் கழுத்தைப் பிடிக்கிற சூழ்நிலை வந்து விட்டது. இரவு படுத்தால் தூக்கம் வராது. சோறு பிடிக்காது. வெளியே போக பயம். வீட்டில் இருந்தாலோ, ஏடாகூடமான சிந்தனைகள்!

'இருவரில் யாரால் இந்த நிலை வந்தது' என்றோ, அப்படி என்னதான் செலவு ஆனது என்றோ திரும்பத் திரும்ப யோசிப்பதால் வெறுப்பும் கோபமுமே மிஞ்சும் என்பதைக் கண்டு கொண்டோம். அதை விடுத்து, நகைகளை விற்று, அப்படி இப்படிச் சமாளித்து ஒருவழியாகக் கடனை அடைத்து விட்டது ஒருபுறம் இருக்கட்டும். அந்தக் காலகட்டத்தில் ஒருவர் மீது மற்றவர் செலுத்திய கூடுதல் அன்பு, அக்கறை, பரிவு, சிக்கல்களை மேலும் சிக்கலாக்க வழி செய்யும் 'குற்றம் சாட்டும் மனப்பான்மை' இல்லாமலிருந்தது - இவையே சுமையிலிருந்து மீளக் காரணம் என்று கருதுகிறோம்.

வசந்தா – தேவநாதன் :

"அப்போது நாங்கள் சிவகாசிக்கு அருகில் ஒரு குக்கிராமத்தில் குடியிருந்தோம். அங்கே மனிதர்கள் அவ்வளவாகக் கிடையாது. ஆனால் நிறைய கொலைகாரர்கள் உண்டு. தோதாக ஊரைச் சுற்றிலும் வாழைத் தோப்பு வேறு. தினம் தினம் ஏதாவது ஒரு தகராறு, அடிதடி, கொலை, ரத்தம். தவிர ஊர் முழுக்க சாராயத் தொழில் தான்!

"இப்படிப்பட்ட ஊரில் நான் பெரும்பாலான நாட்கள் தனியாக இருந்தாக வேண்டிய கட்டாயம். காரணம் இவர் வேலை அப்படி. இரவு முழுக்க வர முடியாமல் போகும். இரண்டு நாள் கூட வர இயலாமல் இருக்கும்படி ஆகும். இரவானால் பயம்தான்!

"திருமணமான புதிது வேறு. என்னைப் பார்க்க ஊரிலிருந்து வந்திருந்த என் தம்பி, அந்த ஊரின் நிலவரத்தைப் பார்த்து பயந்து, மிரண்டு விட்டான். "இந்த நிமிஷம் நீ என்னோடு கிளம்பி விடு. இங்கே இருக்கக் கூடாது!" என்று ஒரே பிடிவாதம்!

"நான் மறுத்து விட்டேன். எப்படியும்



• மதனசுந்தரி - கோபாலகிருஷ்ணன்

புதிய ஃபார்முலா:

# ஒரு கப் காதல் + ஒரு கப் சிரிப்பு



• வசந்தா - தேவநாதன்

• ஜெயஸ்ரீ - ரவி



அவர் இருந்தாக வேண்டிய இடம். விட முடியாத வேலை. எத்தனை நாள் பிரிந்து இருக்க முடியும்? தவிர அது நியாயமும் இல்லை என்று தோன்றியது. ஒருவருக்கு ஒருவர் நாங்கள்தானே ஆறுதல், பேச்சுத் துணை, அன்பு காட்ட, எல்லாம்?

சூழ்நிலை - சந்தர்ப்பங்களுக்கேற்பப் 'புரிந்து கொள்ளுதல்', 'ஒத்துப் போதல்' என்பதுதான் இனிய இல்லறத்துக்கான ஒரே ஐடியா!'' என்கிறார் வசந்தா.

**ஜெயஸ்ரீ - ரவி :**

"வடிகட்டின, சுத்தமான காதல். கூடுதலாகக் கொஞ்சம் சென்ஸ்-ஆஃப் ஹ்யூமர். இந்த இரண்டும்தான் சரியான ஃபார்முலா என்று நினைக்கிறேன்'' என்றார் ரவி.



• ஆராவமுதன் - கீதா

"ஒருத்தருக்கு ஒருத்தர் அன்பை மனசுல வெச்சிட்டிருந்தாப் போறாது. வெளியில காட்டணும். சின்னச் சின்னப் பரிசுகள்... பாராட்டுகள்... புகழ்ச்சி... இதுலல்லாம் வஞ்சனையே கூடாது. இதோட கூட அப்பப்ப ஏதாவது ஜோக் அடிச்சிட்டே இருந்தா - அது கடி ஜோக்கா இருந்தாக் கூடப் போதும் - லைஃப் ரொம்ப கலர்ஃபுல்லா ஆயிடும்!'' என்றார் ரவி.

"ஒரு சமயம், ஏதேதோ வேலைகளினால் தொடர்ந்து இரண்டு மாதம் கரெண்ட் பில் கட்ட முடியாமல் போயிடுச்சு. எம்-ஈ-எஸ் காரன் வந்து ஃப்யூஸ் பிடுங்கிட்டுப் போயிட்டான், யாரும் இல்லாத போது. மறுநாள் இவருக்கு ஆபீஸ் லீவ். எனக்கு மட்டும் இருந்தது. 'இன்னிக்குப் போய் கட்டிட்டு வந்துடுங்க, மறக்காம'ன்னு சொல்லிட்டுப் போயிட்டேன். சாயங்காலம் வந்து பார்த்தா, வழக்கம் போல இவர் மறந்து போயிட்டிருந்தார்! கரெண்ட் அன்னிக்கும் இல்லை! வந்ததே கோபம்! பயங்கரமா கத்திட்டேன்.

"இவர் என்ன சொன்னார் தெரியுமா? 'பகல்ல யாரும் இல்லாத போது கரெண்ட் வேணாம். ஈவினிங் ஆனா நீ ஆபீஸ் விட்டு வந்துடுவே. பேசிட்டே வீடு முழுக்க நீ ஓடி ஆடி வேலை செஞ்சிட்டிருந்தாலே வெளிச்சம் வந்தாப்பல இருக்கும். எதுக்கு அனாவசியமா நமக்குக் கரெண்ட்?' அப்படீன்னாரே பார்ப்போம்! கோபமெல்லாம் பறந்து, விழுந்து விழுந்து சிரிச்சேன்!'' என்றார் ஜெயஸ்ரீ.

அட்டைப்பட ஜோடி கோபால கிருஷ்ணன் - மதனசுந்தரி, மற்றவர்களைப் போல ஐடியாக்களை அடுக்கவில்லை. "விட்டுக் கொடுத்தல்... எதிலும்... எப்போதும்... இந்த ஒரு விஷயத்தை ஒழுங்காக இருவரும் கடைபிடித்தாலே போதும். சந்தோஷமான இல்லறம் தன்னால் அமையும்!'' என்றார்கள்.

**- துளசி**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **யோகா**

## சுருக் நறுக் - 19 முடிவுகள்

கீழ்க்கண்ட சொல்லோவியங்கள் தலா ரூ. 50/- பரிசு பெறுகின்றன

### புரட்சி என்பது...

● சாசுவதமான மாற்றத்துக்காகப் பாடுபடும் ஓர் இடைக்கால முயற்சி.

- சி.வி. நடராஜ், சென்னை - 102.

● மனங்களில் தோன்றினால் நவபாரதம், உடல்களில் ஊர்ந்தால் மகாபாரதம்!

- ஆர் ஸ்ரீனிவாசன், திருச்சி - 6.

● சரித்திரத்தை மாற்றும் சாதனையாளர்களைத் தோற்றுவிக்கும் களம்.

- என். புவனேஸ்வரி, மதுரை - 1.

● அரசியல்வாதிகளின் அன்றாட ஜபம்.

- ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.

● காலத்தின் அழுக்குகளைக் கூட்டித் தள்ளும் விளக்குமாறு. அதனால்தான் அதைப் பெரும்பாலும் வேலைக்காரர்களே கையில் எடுக்கிறார்கள்.

- ஸ்ரீனிவாஸ் பிரபு, சென்னை - 90

● ஒடுக்கப்பட்ட இதயங்களின் இறுதி வெடிச் சிதறல்கள்!

- எம். கார்த்திக், மதுரை - 1.

# ஹை! ஐடியா!

புத்தம் புதிதாக ஒரு ஐடியா! அதை நடைமுறைப்படுத்தினால் அலுவலகச் சிக்கல் நிமிடத்தில் தீர்ந்துபோகும் என்று உறுதியாக நம்புகிறீர்கள். அட்டெண்டன்ஸில் கையெழுத்துப் போட்ட கையோடு மேலதிகாரியிடம் போய் அதை உற்சாகமாக வெளிப்படுத்துகிறீர்கள்.

கோணலாய் ஒரு சிரிப்பு;

'பூ! இவ்வளவுதானா' என்பதுபோல் ஒரு பார்வை.

"நேற்று தயாரித்த ரிப்போர்ட்ல கணக்கெல்லாம் சரியா இருக்கிறதா என்று மீண்டும் ஒரு முறை சரி பார்த்துடுங்க..."- இப்படியொரு சம்பந்தா சம்பந்தமில்லாத பதிலுடன் உங்கள் ஐடியா குப்பைத் தொட்டியில் போடப்படுகிறது!

எத்தனையோ நிறுவனங்களில் தினந்தோறும் நடக்கும் கதை இது!

இன்று உலகப்புகழ் கம்ப்யூட்டர் நிறுவனங்களாகத் திகழும் பல கம்பெனிகள் தொடங்கப்படுவதற்கு அஸ்திவாரமாக அமைந்ததே இத்தகைய ஐடியா நிராகரிப்புச் சம்பவங்கள்தான்! ஓர் இடைநிலை ஊழியர் துணிகரமான ஐடியா கொடுக்க, 'ஐயய்யோ!' என்று நிர்வாகம் ஒதுங்க, அந்த ஐடியாவைத் தூக்கிக் கொண்டு அவ்வூழியர் வெளியேறி, தனி நிறுவனம் ஆரம்பிக்க... இப்படிப் போகும் கதை!

இவ்வாறு வெளியேறி வெற்றி பெறுவது ஒரு வகை சாதனைதான் என்றாலும் எல்லோருக்கும் சாத்தியமானதல்ல... எனவே நமது ஐடியாவை ஏற்கும்படி பக்குவமாக எடுத்துச் சொல்வது அவசியமோ அவசியம்.

அதற்கான சில ஐடியாக்கள்(!) இதோ:

**எதிராளி முகத்தை விளக்கெண்ணெய் குடித்ததுபோல் வைத்துக் கொண்டு நீங்கள் சொல்வதை சுவாரஸ்யமின்றி கேட்கிறாரா...? கவலையே வேண்டாம்.**

ஐடியாவை எடுத்துச் சொல்லும்போது நம்மை முன்நிறுத்திக் கொள்ளக் கூடாது. "சார், எனக்கு ஒரு ஐடியா வந்திருக்கு" என ஆரம்பிக்காமல், "சார் இப்படிச் செய்தால் எப்படி இருக்கும்...?" என்று ஆரம்பிக்கலாம்.

எதிர்த்தரப்பைச் சேர்ந்தவரின் நோக்கிற்கு ஏற்ப ஐடியாவைப் புரட்டிப் போட்டு வெளிப்படுத்த வேண்டும்:

"இப்படிச் செய்தால் ஊழியர்கள் சந்தோஷப்படுவார்கள்..." என்று சொல்வதை விட "இப்படிச் செய்வதன் மூலம் கம்பெனிக்கு சில ஆதாயங்கள் இருக்கும்..." என்று விளக்கலாம்.

மிகைப்படுத்தவே கூடாது. ஐடியாவை சும்மா கோடி காண்பித்து நூல் கண்டின் முனையை எதிராளி கையில் கொடுத்து விடுங்கள்- அவர் மெல்ல அதைத் தமது போக்கில் பிரித்துப் பார்த்து மகிழட்டும்; கொஞ்சம் சாதனை உணர்வு பெறட்டும்!

உங்கள் ஐடியாக்களுக்கு எதிரான பலமான வாதங்கள் முன்வைக்கப்பட்டால் பொறுமையிழக்காதீர்கள். முடிந்தால் அந்த வாதங்களை எதிர்பார்த்து, தயாரான பதில்களுடன் இருங்கள். அது



வும் சரிப்படா விட்டால் அந்த வாதங்களின் அடிப்படையில் புதிதாக யோசித்து ஐடியாவை மேலும் பலப்படுத்துங்கள்.

எதிராளி முகத்தை விளக்கெண்ணெய் குடித்ததுபோல் வைத்துக் கொண்டு நீங்கள் சொல்வதை சுவாரஸ்யமின்றிக் கேட்கிறாரா...? கவலையே வேண்டாம். பெரும்பாலானவர்கள் புதிய ஐடியாக்களை இந்த முறையில்தான் 'வரவேற்பார்கள்'. "ஏன்யா, இது நடக்கக் கூடிய காரியமாய் இருந்தால் ஏற்கெனவே எவனாவது இதைச் செய்திருப்பானே...!" என்று பதில் சொல்வார்கள். இதனால் சோர்வடைய வேண்டாம்.

நேராக எதிராளியிடம் போய் ஐடியாவைச் சொல்லாமல், ஐடியாக்களு



டன் உறவாடும் அன்பர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களிடத்தில் உங்கள் யோசனைகளை வெள்ளோட்டம் விட்டுப் பாருங்கள். நீங்கள் தேர்ந்தெடுக்கும் நபர், யோசனைகளை முறைப்படுத்துவதில் வெற்றியுடன் தோல்வியும் கண்டவராக இருக்க வேண்டும்.

ஒரேயொரு விளக்கைக் கொண்டு, ஏராளமான விளக்குகளை ஏற்றி வைக்க முடிவது போல்தான் ஐடியாக்களும்! உங்களின் ஒரேயொரு ஐடியா ஏராளமான ஐடியாக்கள் பிறக்கக் காரணமாயிருக்கலாம்!

**ஒ**ரு சிறந்த ஐடியாவின் இலக்கணம் என்ன...?

முதல் அடையாளம்– ஒருவர் நிராகரிப்பதாலோ கிண்டல் செய்வதாலோ அந்த ஐடியா செத்து விடாது. கூடிய சீக்கிரத்தில் வேறொருவர் அதே ஐடியாவுடன் வரக்கூடும். அல்லது வேறு போட்டி நிறுவனம் அதை அமுல்படுத்திவிடும்.

எனவே தயங்கியோ கூச்சப்பட்டோ ஐடியாவை வெளிப்படுத்தாமல் இருந்துவிட வேண்டாம். அதே சமயத்தில் போட்டிநிறுவனங்களைச் சேர்ந்தவர்களின் காதுகளுக்கு ஐடியா எட்டாமல் பார்த்துக் கொள்ளுங்கள்.

**ஐ**டியா வளர்ப்பது எப்படி...?

எந்தவொரு புதிய முயற்சியைத் தொடங்கும் முன் நான்கு கேள்விகளை எழுப்பிப் பாருங்கள்.

- இதைச் செயல்படுத்த மிகச் சிறந்த வழி நான் தேர்ந்தெடுத்துள்ள வழிதானா?
- என்னுடைய சொந்தப் பணம் இதில் முதலீடாகியிருந்தால் இப்படித்தான் செயல்படுவேனா...?
- இந்த யோசனையின் மூலம் என் மேலதிகாரிக்கு நல்ல பெயரும் பதவியுயர்வும் இடைக்குமா...?
- பிறருடைய பணத்தையும் நேரத்தையும் மிச்சப்படுத்த நான் உதவ முடியுமா...?

**ந**வீன நிர்வாக முறைகளை ஏற்கும் நிறுவனங்கள் ஐடியாக்கள் பெறுவதற்கென்றே கூட்டங்கள் நடத்துகின்றன. ஒரு ஐடியாவிலிருந்து பல ஐடியாக்கள் பிறக்கும் என்பது நம்பிக்கை. அதனால் நடைமுறை சாத்தியமற்ற ஐடியாக்களைக் கூட பொறுமையுடன் கேட்டுப் பதிவு செய்கின்றன.

ஐடியாவுக்கு ஆதரவாகவும் எதிராகவும் அணிகள் உருவாவதை இத்தகைய நவீன நிறுவனங்களில் ஊக்கப்படுத்துவதில்லை. அதாவது, no politics! ஓர் ஐடியா, அதன் உள்ளீடான மதிப்புக்காக மட்டுமே ஏற்கப்படுகிறது.

தெரிவிக்கப்படும் அத்தனை ஐடியாக்களுமே எழுத்து வடிவில் பதிவு செய்து வைக்கப்படுகின்றன. இன்றில்லாவிட்டாலும் பிற்காலத்தில் அவை உபயோகப்படக்கூடும்.

**ம**னிதனுடைய படைப்புத்திறனின் ஆன்மாவே 'ஐடியா' என்கிற சிறு உபாயத்தில்தான் அடங்கியிருக்கிறது. ஆதலால் ஐடியாக்களைத் தருவதில் காட்டும் அதே அக்கறை அவற்றைப் பெறுவதிலும் நமக்கும் இருக்க வேண்டும்!

நன்றி: **EX இதழ்**

• லேகா ரத்னகுமார்

ஆரம்பத்தில் ஊதுவத்தி அட்டைகளுக்குப் படம் வரைந்து கொடுத்துக் கொண்டிருந்தார். அப்புறம் ஒரு முறுக்கு மிஷின் விளம்பரம். அதன் அட்டையில் ஒரு நடிகையின் படம் வெளியிட வேண்டி, கோடம்பாக்கத்தில் அலைந்ததில் கொஞ்சம் போல் திரை உலக அறிமுகம். படிப்படியாக போட்டோகிராஃபி, இயக்கம்,



# கோடம்பாக்கம் via ஜெர்மனி!

இசை என்று அடியெடுத்து, 'லேகா சோனா டோன் ரெக்கார்டட் மியூஸிக் லைப்ரரி' என்ற ரெடிமேட் இசை வங்கியைத் தொடங்கி இருக்கிறார் லேகா ரத்னகுமார்.

இசைக்கருவிகள், கலைஞர்கள், இசையமைப்பாளர்கள் கால்ஷீட், சம்பளம் பிரச்னைகள் ஏதுமில்லாமல், ரெடிமேடாக திரைப் படங்களுக்கு இந்த இசை வங்கியிலிருந்து எவ்வித இசை வேணுமானாலும் கிடைக்கிறது. ஒரு முழுப் படத்துக்குப் பின்னணி இசை சேர்க்க ரூ.40,000/- மட்டுமே சார்ஜ்.

**எ**ப்படி உதித்தது இப்படி ஓர் ஐடியா?

"என் சிறுவயதில், 'உன்னால் சுயமாகச் சம்பாதிக்க முடியுமா?' என்று என் தந்தை கேட்ட கேள்விதான் என் சிந்தனையைத் தூண்டி, இப்படிச் செயல் பட வைத்திருக்கிறது" என்றார் ரத்னகுமார்.

"1990ல் ஜெர்மனியில் நடந்த ஒரு விழாவுக்குச் சென்றிருந்தேன். அங்கே இது போன்ற இசை வங்கிகள் ஏற்கெனவே உண்டு. HBO Studio என்கிற பிரபல இசைக் கூடத்திற்குச் சென்று பார்த்தேன். அங்கு அவர்கள் பயன்படுத்திய ரெடிமேட் இசை வடிவங்களைக் கேட்டு மயங்கினேன். 'நம் நாட்டில் ஏன் இப்படி ஒரு ரெடிமேட் இசை வங்கி தொடங்கக் கூடாது' என்று தோன்றியது.

"92ல் மறுபடி ஜெர்மனி சென்று, இருபது CD (காம்பாக்ட் டிஸ்க்)கள் மட்டும் வாங்கி வந்தேன். அத்தனையும் மிகச் சிறந்த இசைப் பெட்டகங்கள். பல்வேறு சந்தர்ப்பங்களுக்குப் பொருத்தமாக, அந்நாட்டு இசைக் கலைஞர்களைக் கொண்டு இதற்கென்றே தயாரிக்கப்பட்ட இசை வடிவங்கள். அவற்றிலிருந்து எனக்குத் தேவையான பகுதிகளை எடுத்து, நம் ஊர் இசையையும் கலந்து, 'இருட்டில் ஒரு வானம்பாடி' என்ற என் டீவி சீரியலில் இசையமைத்தேன். தொடரில் இசை வெகுவாகப் பாராட்டப்பட்டதால் அதையே தொடரத் தொடங்கினேன்!" என்கிறார் ரத்னகுமார்.

இந்த ரெடிமேட் இசை எப்படி ரெக்கார்ட் செய்யப்படுகிறது?

ஜெர்மனியிலிருந்து, நாற்பத்தெட்டு டிராக்குகளில் பதிவு செய்யப்பட்ட இசை ஒலி நாடாக்கள் இங்கே அனுப்பப்படுகின்றன. 'குரல் டிராக்'கில் மட்டும் பியானோ இசை இருக்கும். இங்கே வந்த பின், நம் ஊர் கவிஞர்களைக் கொண்டு பாடல்கள் எழுதப்பட்டு, இசைக் கருவிகளையும் சேர்த்து, பாடுபவர்களின் 'டெம்போ'வையும் சீர்செய்து, மிக்ஸ் செய்து, அதை எட்டு டிராக்குகளில் பதிவு செய்து, மீண்டும் ஜெர்மனிக்கு அனுப்புகிறார்கள். அங்கே இந்த எட்டு 'டிராக்', மீண்டும் நாற்பத்தெட்டு டிராக்குகளில் பதிவாக்கப்பட்டு DAT (Digital Audio Tape) அனுப்பப்படுகிறது.

"வெறும் மேற்கத்திய இசை அல்ல, நமது கிராமிய, சாஸ்திரிய, கர்நாடக இசை வடிவங்களும் எனது வங்கியில் உண்டு. பொழுது விடிவது, மறைவது, கோவில் காட்சிகள், காதல் சந்தர்ப்பங்கள், சோகம், வீரம், நகைச்சுவை என்று எந்த சந்தர்ப்பத்துக்குமான இசை வடிவங்களும் இதில் கிடைக்கும்" என்கிறார் ரத்னகுமார்.

இதயம் நல்லெண்ணெய், எம்.ஆர்.எஃப், ரீட்டா ஹேர் ஆயில், இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் விளம்பரங்களுக்கு இந்த முறையில் இசையமைத்திருக்கிறாராம்.

நம் ஊர் நாதஸ்வரம், தவில், மிருதங்கம், சிதார் போன்ற கருவிகளைக் கொண்டு இசை வடிவங்கள் தயாரித்து, மேல் நாடுகளுக்கு ஏற்றுமதியும் செய்து வருகிறார்.

இந்த இசை வங்கி தொடங்கி இன்னும் ஒரு திரைப்படத்துக்கும் இசையமைக்க வாய்ப்பு வராதது குறித்து வருத்தப்படுகிறார்.

- மாலதி சந்திரசேகர்,
படம் : யோகா

ஆரோக்கிய வாழ்விற்கு அடித்தளம்,

உன்னத ஊட்டச்சத்து

# CALC
# PROTE
# VITAM



**SB**
**SmithKline Beecham**




# UM
# N
# NS

ஹார்லிக்ஸ், சிறப்பான முறையில் தயாரிக்கப்பட்டதால் பால், கோதுமை மற்றும் மால்ட் பார்லியின் இயற்கை குணநலன்கள் இதில் நிறைந்துள்ளன.. எனவே ஹார்லிக்ஸின் ஊட்டச்சத்தால் உங்கள் உடலுக்கு நிச்சயமாகக் கிடைக்கிறது :–

## கால்ஷியம்

வளரும் வயதில், எலும்புகளை உறுதியுடன் வளரச் செய்து, முதுமையில் அவை முறிந்து போகாமல் பாதுகாக்க கால்ஷியம் மிகவும் அவசியமானதாகும்.

## புரோட்டீன்

தசைகளின் வளர்ச்சிக்கு ஏற்றது. மேலும் உங்கள் குழந்தைகளின் வளர்ச்சிக்கும் இன்றியமையாதது.

## விட்டமின்கள்

ரத்த விருத்திக்கும், நல்ல தெளிவான கண்பார்வைக்கும், ஆரோக்கியமான சருமத்திற்கும் மற்றும் நோய்களை எதிர்த்து உடலைப் பாதுகாப்பதற்கும் இவை உதவுகின்றன.

ஹார்லிக்ஸ், ஊட்டச்சத்துகளால் நிறைந்துள்ளதால் உலகம் முழுவதும் லட்சோபலட்சம் குடும்பங்கள் இயற்கை மூலப்பொருட்களைக் கொண்டு தயாரிக்கப்பட்ட ஹார்லிக்ஸை தங்கள் குடும்பங்களுக்கு ஏற்ற மிகச் சிறந்த உன்னத ஆரோக்கிய பானமாக நம்புகிறார்கள். எனவே, உங்கள் குடும்பத்திற்கும் ஹார்லிக்ஸின் அதே ஒப்பற்ற போஷாக்கை அளித்திடுங்கள்.

# Horlicks

குடும்பத்திற்கு சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

HTA.5544.96 TAM

**நா**ன் சபாபதியை எதிர்பார்க்கவில்லை, இங்கே. இந்தக் கோலத்தில்.

சபாபதி பி.ஏ. பொருளாதாரம், தட்டெழுத்து, சுருக்கெழுத்து மேனிலை.

கருநீல அரைக்கைச் சட்டை. அதே நிறத்தில் பேண்ட். காதோரம் பால்பாயிண்ட் பென். சட்டைப் பையில் எட்டிப் பார்க்கும் பில் புத்தகம்.

"யோவ், சப்ளையர்! இந்த டபராவை எடுய்யா. ஈ மொய்க்குது."

"இந்தாப்பா இந்த டேபிளைத் துடைக்கச் சொல்லு."

"ரெண்டு ரோஸ்ட், சீக்கிரம்."

"பில் குடுப்பா."

திரும்பிய பக்கமெல்லாம் கட்டளைகள். பசியின் அதிகாரம்.

சபாபதி கிளீனரைத் தேடினான். சட்டென்று இடதுகை விரல் பரப்பி, டபராக்களை வாரி உள்ளே மறைந்தான்.

என்னுள் சுருக்.

'சபாபதி உனக்கு இன்னுமா உருப்படியான வேலை கிடைக்கவில்லை? உன் படிப்பும் திறமையும் இப்படியா வீணாக வேண்டும்?'

சுற்றிலும் பார்த்தேன். ஓட்டல் நிரம்பி வழிந்தது. உட்கார இடம் கிடைப்பதே அதிர்ஷ்டம்.

"என்ன சார் வேணும்?"

சபாபதிதான். மீசை அடர்ந்து ஓரத்தில் இளநரை. முகம் மாறி,

# உழுத்தல

கறுத்திருந்தது - என்னை ஞாபகம் வைத்திருப்பானா?

"சூடா என்ன இருக்கு?"

"தோசை... ரோஸ்ட்."

"ஒரு ரோஸ்ட்."

என் முகத்தை ஒரு விநாடிதான் பார்த்தான். நகர்ந்தான். அவனை அழைத்துப் பேச மனம் துடித்தது.

என்ன பேசுவது? எப்படிப் பேசுவது? அவனுடைய இந்த நிலைக்கு நானும் காரணமா? குழப்பம்.

**ஐ**ந்து வருடங்களுக்கு முன்பு... இதே ஊர். அரசு நிறுவனம். தலைமை எழுத்தர் பதவி. வேலை பார்த்த டைப்பிஸ்ட் தாராவுக்குக் கல்யாணம். வேலையை விட்டுவிட்டாள். ஓர் இடம் காலி. மேலிடத்திற்கு எழுதினோம். வேலை வாய்ப்பு அலுவலகத்துக்குக் கைகாட்டினார்கள்.

என் மேலதிகாரி தீனதயாளன் நல்லவர். கெட்டிக்காரர். வேலையில் கண்டிப்பானவர். சொந்த ஊர் ஆரணி. ஊருக்கு மாற்றல் தேடிக் கொண்டிருந்தார்.

"வேலூர்லேர்ந்து பதினைஞ்சு பேர் லிஸ்ட் வந்திருக்குது. இதை ஒரு பார்வை பார்த்து வையுங்க. அடுத்த திங்கட்கிழமை நாம ரெண்டு பேரும் இண்டர்வியூ பண்ணிடலாம். இது பர்மனெண்ட் போஸ்ட்."

பல ரக படிப்புகள், தகுதிகள். சபாபதியின் பெயரும் அவன் தகுதிகளும் தனியாகத் தெரிந்தன.

**வெ**ள்ளிக்கிழமை காலை.

வாசலில் பழக்கமில்லாத முகங்கள். ஓர் இளைஞன். அவன் தாய். கையில் சின்னப்பை.

"யாரது? என்ன வேண்டும்?"

"ஒண்ணுமில்லே. உங்களைப் பார்த்துட்டுப் போகலாம்னு."

"என்ன விஷயம்?"

"வந்து... வந்து..."

"என்ன விஷயம்? தெளிவா பேசுங்க. நான்



ஆபீசு போகணும்!"

திடீரென்று என் காலில் விழுந்தார்கள்.

"நீங்கள்தான் என் குடும்பத்துக்கு விளக் கேற்றி வைக்கணும். இவன் என் மகன் சபா பதி. பி.ஏ. படிச்சிருக்கான். டைப் தெரியும்."

"அதுக்கு என்ன இப்போ?"

"திங்கட்கிழமை உங்க ஆபீசிலே இண்டர் வியூ. கடிதாக வந்திருக்குது. நான் பரம ஏழை. ரெண்டு வீட்லே சமையல் செஞ்சு இவனைக் காப்பாத்தறேன்."

"எழுந்திருங்க. நீங்க என்னைப் பார்க்க வந்ததே தப்பு. அந்த வேலையை உங்களுக்கு வாங்கித் தர எனக்குத் தகுதியோ, திறமையோ இல்லை. உங்கப் பையனுக்குத் திறமையும் தகுதியும் இருந்தால் அந்த வேலை தானே கிடைக்கும்!"

என் முன் அந்தப் பை நீண்டது.

தட்டிவிட்டேன். பையிலிருந்து ஒரு வெள்ளிக் குத்துவிளக்கும் ஐம்பது ரூபாய்க் கட்டும் வெளியே விழுந்தன.

"என்னை ஊர்ச் சொத்தில் கொள்ளை யடிச்சுப் பிழைக்கறவன்னு நினைச்சீங்களா? எனக்கு அரசாங்கம் சம்பளம் தருது. அது போதும். உங்கள் பிச்சை வேண்டாம்."

"எங்களால இவ்வளவுதான் முடியும். இது கூட இவன் அப்பா எனக்கு கட்டிய தாலியை வித்த பணம். அவரே இல்லை. அவர் கட்டிய தாலியாவது இவன் வாழ உதவட்டுமேன்னு தான்..."



"கெட் அவுட்! நான் தகுதியையும் திறமை யையும் நம்பறவன். குறுக்கு வழி பிடிக்காத வன். தகுதியுள்ளதுதான் இந்த உலகத்துலே நீடிச்சு இருக்கும்!"

"......"

"நீங்க இங்கே வந்தது தெரிந்தால் என் வேலைக்கே ஆபத்து! என் மேலதிகாரி நெருப்பு. இந்த விஷயம் தெரிந்தால் கட்டு எரிச் சிடுவார். உங்களுடைய குறுக்குப் புத்தியாலே உங்க மகனுக்கு அந்த வேலை கிடைக்காமல் போனாலும் போகலாம்."

"ஐயையோ, தப்பா எண்ணாதீங்க. என் னவோ என் பையனுக்கு வேலை கிடைச்சுட

## ரா. குருராஜன்

ணும்கற வெறி. எல்லாத்துக்கும் ஒரு விலை இருக்குதே!"

"எதுக்கு வேணும்னாலும் விலை இருக்க லாம். தர்மத்துக்கு, நியாயத்துக்கு, தகுதிக்கு விலை இல்லை. விலைக்கு வாங்கவும் முடி யாது. இதே மாதிரி பைத்தியக்காரத்தனமா என் மேலதிகாரிகிட்டே போயிடாதீங்க. அவர் நெருப்பு.

"சபாபதி, ஒண்ணை மட்டும் நினைவில் வச்சுக்கோ. நாமெல்லாம் படிச்சவங்க. படிச் சதை வாழ்க்கையிலே கடைப்பிடிக்கணும். எத்தனை குறள் படிச்சிருக்கே. அதிலே ஒரு குறளையாவது முன் மாதிரியா வைச்சு வாழ்ந்து பார். உருப்படுவே. என்னிக்கும் திற மைக்கும் தகுதிக்கும் மதிப்பு உண்டு."

இரண்டு பேரும் தலைகுனிந்தபடி வெளி யேற, என் மனசுக்குள் ஒரு திருப்தி. ஒரு லஞ் சத்தைத் தடுத்த பெருமை.

பதினோரு மணி. டெலிபோன் அலறியது.

"ஹலோ... தீனதயாளன்தான் பேசறேன்..."

"......"

"ஆமாங்க... ஆரணிதான்."

"......"

"வந்திருக்கு... செல்வராஜா... இருக்குதே..."

"......"

"ரொம்ப சந்தோஷம்... பார்க்கறேன்..."

"......"

"கட்டாயம்... கட்டாயம். அதை மட்டும் கொஞ்சம்..."

"......"

"அப்படியா, ரொம்ப நன்றிங்க!"

என்னை அழைத்தார்.

"குரு, திங்கட்கிழமை இண்டர்வியூவை நானே கவனிச்சுக்கறேன். பேனல்லே உங்க பேர் போட்டிருக்கேன். நீங்க உங்க வேலை யைப் பார்த்துக்கங்க. பதினைஞ்சு பேர்தானே. எனக்குக் கஷ்டமில்லே."

பேச்சில் வித்தியாசம். தட்டிக் கழித்தல்.

திங்கட்கிழமை. நான் அழைக்கப்படவில்லை.

பதினைந்து பேரில் சபாபதி இருந்தான். சுலபமான கேள்விகள். 'உன் பெயர் என்ன? உன் அப்பா பெயர் என்ன? இந்தியாவின் தலைநகரம் என்ன?'

பதினைந்து பேருக்கும் நம்பிக்கை.

வெள்ளிக்கிழமை. ஒடிசலாக ஒரு பையன் வந்தான். பெயர் மெ ஜ் என்றான். சின்சியர்லிக்கு முதலில் 'C' போட வேண்டுமா 'S' போட வேண்டுமா என்று சந்தேகம் கேட்டான்.

கண்ணுச்சாமி காதைக் கடித்தான். "சார், புதுப்பையன் பெரிய ஆள் சார். 'கோட்டை' தெரியுமாம் சார்! நாப்பது ரூபாய் செலவு பண்ணியிருக்கானாம் சார். டீக்கடையிலே சொன்னான். நம்ம ஆபீசர் வீட்டுக்குப் புதுசா ஒரு ஃப்ரிட்ஜூம், வாஷிங் மெஷினும் வந்திருக்குது சார்."

மனம் வெறுத்துப் போனது. தீனதயாளன், நீங்கள் கூடவா?

கடைத் தெருவில் சபாபதி தென்பட்டான். பழைய சைக்கிள், பின்பக்கம் எவர்சில்வர் டிரம். கைப்பிடியில் பக்கெட். பக்கெட்டில் தம்ளர்கள். மற்றொரு கைப்பிடியில் துணிப்பை. நடமாடும் காப்பிக் கடை.

இந்த ஊரில் இருக்கப் பிடிக்கவில்லை. சேலம் கேட்டேன். தீனதயாளனும் ஆரணி போய்ச் சேர்ந்தார்.

ஐந்து வருடங்கள் கழித்து. சென்னை போக வேண்டிய நிலை. வழியில் இங்கே காப்பி சாப்பிட நிற்க -

தோசை வந்தது. காப்பி வந்தது. சாப்பிட மனம் வரவில்லை. சபாபதியும் பசித்த

"ஆனாலும் என் கணவருக்குக் குழந்தை மனசு...."

"இருக்கலாம். அதுக்காக, ஆபீஸுக்குக் கிளம்பும்போது, 'மம்மூ ரெடியா'ன்னா கேட்கணும்...?"

- ஆர். வசந்தகுமார்



கும்பலின் ஆர்டர்களுக்குத் தக்கபடி ஓடிக் கொண்டிருந்தான்.

பில்லை வைத்துவிட்டுப் போனவன் ஆளையே காணோம்.

திருவள்ளுவர் கிளம்பத் தயார் என்றார். எழுந்தேன்.

"இங்கே சபாபதின்னு..." கல்லாவில் கேட்டேன்.

"சபாபதியா? பக்கத்து ரூம்லே பாருங்க..." கைகாட்டினார்.

சபாபதி மேஜைமேல் குவிந்திருந்த ரூபாய் நோட்டுகளை எண்ணிக் கொண்டிருந்தான்.

"என்ன சார், சௌக்கியமா? எங்கே இவ்வளவு தூரம்? ஞாபகம் இருக்கா?"

"சபாபதி... உன்னை... இங்கே... இந்த நிலையிலே பார்க்க... எனக்கு... எனக்கு..." தொண்டை அடைத்தது. கண்ணீர் மூட்டம்.

"உட்காருங்க சார்..."

"என்னை மன்னிச்சிடுப்பா... அன்னிக்கு நான்... நான்..."

"ஏன் சார் அழறீங்க? சார், இப்ப நான் நல்லா இருக்கேன். இதுக்கெல்லாம் அன்னிக்கு நீங்க சொன்ன புத்திமதி! தகுதிக்கும் திறமைக்கும் என்னிக்கும் மதிப்பு உண்டு. சொன்னீங்களே... எவ்வளவு அருமையான புத்திமதி...!"

"சபாபதி... என்னை மன்னிச்சிடுப்பா..." அவன் கையைப் பிடிக்கப் போனேன்.

"சார்... என்ன ஆச்சு உங்களுக்கு? இப்ப நான் நல்லாத்தான் இருக்கேன். எனக்கு அந்த வேலையை வாங்கிக் கொடுக்காவிட்டாலும் நல்ல புத்திமதி சொன்னீங்க. முதல்லே அந்த வேலை கிடைக்காததுக்கு வருத்தப்பட்டேன். அப்புறம் ஓர் எண்ணம்.

"லஞ்சம் கொடுக்க வைச்சிருந்த பணத்தையே வைத்து ஏன் முன்னேறக் கூடாது? முதல்லே சைக்கிள்லே நடமாடும் காப்பிக் கடை போட்டேன். அப்புறம் டிபன் சென்டர். திறமை, தரம், உழைப்பு மூணும் என்னை வளர்த்துது. போன வருஷம்தான் இந்த பஸ் ஸ்டாண்டு கடையைக் காண்டிராக்ட் எடுத்தேன். வியாபாரம் நல்லா போறது. எல்லாம் உங்க உபதேசம்..."

"அப்ப இந்த டிரெஸ்?"

"இன்னிக்கு ரெண்டு பேர் லீவு. முதலாளின்னு கல்லாவிலேயே உட்கார்ந்திருந்தால் வேலை நடக்குமா? நாமும் தொழிலாளியோடு தொழிலாளியா உழைக்கணும். என்ன சொல்றீங்க?"

நெஞ்சில் நிம்மதி.

"நல்லா இருப்பா..."

திருவள்ளுவரை நோக்கி நடந்தேன் மன நிறைவோடு!

# எம்.எஸ். உதயமூர்த்தி பேட்டி

**ஆட்சியாளருக்கு அத்தியாவசியமான பண்பு நேர்மை. அது ஒன்று மட்டும் இருந்தால் அறிவாளிகளையும் ஆற்றல் மிக்கவர்களையும் பயன்படுத்திக் கொண்டு அவர் மிகச் சிறப்பான அரசை நிறுவ முடியும்...**

**—இந்தக் கருத்தைப் பல முறை கல்கியில் எடுத்துச் சொல்லியிருக்கிறோம். அதற்கு வடிவம் கொடுக்கும் வகையில் இன்று தேர்தல் களத்தில் இறங்கியிருக்கிறார் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி. அவருடன் ஒரு சந்திப்பு:**

**"மக்கள் சக்தி இயக்கத்தை ஆரம்பித்த போதே உங்களுக்கு அரசியலில் புகும் எண்ணம் இருந்ததா...?"**

"ஆரம்ப விழா முடிந்த கையுடன் இந்தக் கேள்வியைப் பலர் கேட்டார்கள். அப்போது தான் ஒரு எழுத்தாளனாக மட்டுமே அறியப்பட்டேன். எனவே 'களத்தில் இறங்கவில்லை; அப்படி இறங்குவதற்குண்டான தேகப் பயிற்சி செய்கிறோம்...' என்று பதில் சொன்னேன். 88ல் இயக்கம் ஆரம்பித்தது. அதற்குப் பிறகு அனேகமாக எல்லா அரசியல் கட்சித் தலைவர்களுமே தங்களுடன் இணையும்படியோ ஆதரவு தரும்படியோ கேட்டு என்னிடம் வர ஆரம்பித்தார்கள். அடிப்படையில் நேர்மை இல்லாதவர்களுடன் இணைய எனக்கு விருப்பமில்லை. இயக்கத்தைப் பலப்படுத்திக் கொண்டு தனியாகவே அரசியலில் ஈடுபட முடிவு செய்தேன்."

**"இப்போது இயக்கம் எந்தெந்த வகைகளில் பலமடைந்திருக்கிறது...?"**

"தமிழகமெங்கும் சிறு ஊர்களிலும் பெரிய நகரங்களிலுமாக 250 கிளைகள் இப்போது எங்கள் இயக்கத்துக்கு இருக்கின்றன. தினம் தினம் புதிய கிளைகள் திறக்கப்படுவதாக எனக்குக் கடிதங்கள் வருகின்றன. எங்கள் முயற்சியில் தான் நரிமணம் பகுதியில் எண்ணெய் சுத்திகரிப்புக்கான பலகோடி ரூபாய் திட்டம் தொடங்கப்பட்டிருக்கிறது. நாங்கள் வளர்ச்சித் திட்ட கருத்தரங்கு நடத்தி அறிஞர்கள், தொழில்நுட்ப வல்லுனர்கள், அரசாங்கம், விவசாயிகள் என்று பலதரப்பினரையும் ஒன்று சேர்த்ததால்தான் அது சாத்தியமாயிற்று. வெறும் விவசாயத்தை மட்டுமே நம்பியிருந்த அந்தப் பகுதியின் பொருளாதாரம் முன்னேற்றப் பாதைக்குத் திருப்பப்பட்டிருக்கிறது.

"அதே போல், மேற்கு நோக்கிப் பாய்ந்து வீணாகும் நதிகளின் நீரை திசைதிருப்பி தென்னக நதிகளின் இணைப்பையும் நிகழ்த்திவிட்டால் தமிழ்நாட்டுக்குக் குறைந்த பட்சம் ஐந்நூறு டி.எம்.சி. தண்ணீர் உபரியாகக் கிடைக்கும் என்பதை ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டி மத்திய அரசாங்கத்தை அசைத்திருக்கிறோம். சம்பந்தப்பட்ட அண்டை மாநிலத்து (ஆந்திரா, கர்நாடகா) விவசாயிகளையும் பணக்காரர்களையும் இந்தத் திட்டத்தில் ஈடுபாடு காண்பிக்கத் தூண்டியிருக்கிறோம். இது நடைமுறைப் படுத்தப்பட்டால் அவர்களுக்கும் ஆதாயம் தானே... நாங்கள் பாதயாத்திரை மேற்கொண்டதால் அடித்தள மக்களுடன் நல்லதொரு அறிமுகம் கிடைத்திருக்கிறது. பாதயாத்திரையின்போதே மக்கள் தவிர, பல அதிகாரிகளும் காவல் துறையினரும் ஆளுங்கட்சியின் அக்கிரமங்களை மிகுந்த வருத்தத்துடன் எங்களுக்கு எடுத்துச் சொன்னார்கள். மேற்குத் தொடர்ச்சி மலையில் 250 சில்வர் ஓக் மரங்கள் சட்ட விரோதமாக ஆளுங்கட்சியினரால் வெட்டப்படவிருப்பது அறிந்து தடுத்தோம். அந்த ஆத்திரத்தில் அந்த 250 மரங்களிலும் பட்டைகளையே உரித்துச் சாகடித்தார்கள்..."

**"இப்படி எதற்கும் தயங்காதவொரு அராஜகக் கூட்டத்துடன் எந்த தைரியத்தில் நீங்கள்**



# இரண்டாவது சுதந்திரப் போர்!"

மோதுகிறீர்கள்...?"

"எங்கள் இளைஞர்களிடமெல்லாம் எச்சரித்து வைத்திருக்கிறேன்– எந்தக் காரணம் கொண்டும் வன்முறையை வரவேற்கும் சூழலை நாம் உருவாக்கக் கூடாது என்று... ஆனால் வன்முறைக்கும் அக்கிரமங்களுக்கும் பயந்து நல்லவர்கள் ஒதுங்கியே இருந்து விட்டால் என்ன ஆவது? இந்தத் தேர்தலை இரண்டாவது சுதந்தரப் போராகக் கருதி களத்தில் இறங்க வேண்டியிருக்கிறது..."

**"உங்கள் பிரசார யுக்தி என்ன? மற்ற கட்சிகளின் பண பலத்துக்கு முன் உங்கள் முயற்சிகள் எடுபடுமா...?"**

"எங்களிடம் பணமெல்லாம் கிடையாது. அவரவர் சொந்த செலவில்தான் பிரசாரம் மேற்கொள்ள வேண்டும். ஆனால் அடித்தள மக்கள் வரை எங்களைப் பற்றிய செய்தி சென்றடைந்துள்ளது. இளநீர் விற்பவர்களும் ஆட்டோ ரிக்ஷா ஓட்டுபவர்களும் இன்று எங்களைப் பற்றி அறிந்திருக்கிறார்கள் என்றால் அதற்குக் காரணம் எனது எழுத்து அவர்களைச் சென்றடைந்திருக்கிறது என்பதுதான்.... எழுத்தாளனாக மட்டுமே இருந்த போது 'எழுதுவது சுலபம்– இந்தியாவுக்காக என்ன செய்யப் போகிறீர்கள்?' என்று கேட்டார்கள். அந்தத் தூண்டுதலில்தான் இயக்கம் பிறந்தது. இப்போது இயக்கத்தின் எல்லையை விரிவு படுத்தி அரசியலில் நுழைகிறோம். எங்கள் வளர்ச்சியை வாசகர்கள் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். நடுத்தர வர்க்கத்தினர், பெண்கள்... எல்லோரும் விழிப்பு கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள்."

**"வாசகர்கள் வேறு; வாக்காளர்கள் வேறு அல்லவா...?"**

"அப்படியில்லை. பிரிட்டனில் பெர்னார்ட் ஷா இருபத்தைந்து ஆண்டுகள் எழுதியெழுதித் தான் லேபர் கட்சியென மூன்றாவதாக ஒன்று வளர்ந்தது– அட்லீ பிரதமரானார். அதுவரை இரண்டு கட்சிகள் தானே இருந்தன. எனவே எனக்கு நம்பிக்கை இருக்கிறது. எனது 'எண்ணங்கள்' புத்தகம் மட்டுமே 32 பதிப்புகள் இதுவரை வெளியாகியிருக்கிறது. இன்னும் பல நூல்களும் பத்திரிகைகளில் கட்டுரைத் தொடர்களும் வந்துள்ளன... இதுநாள் வரை எங்கள் எழுத்துக்கள் மக்களைத் தொட்டன; இப்போது, இந்தத் தேர்தலில் மக்கள் எங்களை அணுக ஒரு வாய்ப்பு கொடுத்திருக்கிறோம்."

**"எதை முன்வைத்து வாக்கு கேட்பீர்கள்?"**

"நாங்கள் எதற்கு வருகிறோம்; எங்கள் லட்சியம் என்ன என்று எடுத்துச் சொல்லுவோம்... எதிர்க் கட்சியாக இருந்தாலும் வெறும் எதிர்ப்பிலும் அக்கப்போரிலும் பொழுதை விரயமாக்க மாட்டோம். அடித்தளத்தில் உழைப்போம். நாட்டில் 65சதவிகிதத்தினர் ஈடுபட்டுள்ள விவசாயத்துக்கு மீண்டும் முதல் நிலை கொடுப்போம். மனித சக்தியை மையப் படுத்தி காரியங்கள் செய்வோம். அமெரிக்க மைக்ரோஸாஃப்ட் நிறுவன அதிபர் பில் கேட்ஸ் உலகின் மிகப் பெரிய பணக்காரர்களுள் ஒருவர். இந்தியர்களையும் ஜப்பானியர்களையும் அமெரிக்காவில் ஊடுருவ விடாமல் செய்து விட அமெரிக்க அரசு சட்ட மாற்றம் கொண்டு வர முயன்றது. அப்போது பில் கேட்ஸ் என்ன சொன்னார் தெரியுமா..? 'இந்த கம்ப்யூட்டர் தொழிலின் முக்கிய முதலீடே அறிவுதான் (Knowledge based industry.) இந்த மூலதனம் இந்தியர்களும் ஜப்பானியர்களும் கொடுப்பது. அரசாங்கம் அவர்களுக்கெதிராகச் சட்டத்தை மாற்றினால் நான் மைக்ரோஸாஃப்ட்டையே இந்தியாவுக்கு மாற்றி விடுவேன்' என்றார். அந்த சட்ட மாற்றம் கைவிடப்பட்டது– எதற்குச் சொல்கிறேன் என்றால்– அந்த அறிவு வளத்தை நாம் முறையாகப் பயன்படுத்தி நாட்டில் அற்புதங்கள் நிகழ்த்த முடியும்."

**"எத்தனை தொகுதிகளில் வேட்பாளர்களை நிறுத்தத் திட்டம்...?"**

"இயக்க பலம் அதிகமாக உள்ள 25 சட்டமன்றத் தொகுதிகளைத் தேர்வு செய்திருக்கிறோம். ஒரு சில பாராளுமன்றத் தொகுதிகளிலும் நிற்கலாம். இன்னும் சில நாட்களில் முடிவு செய்வோம்."

**"வெற்றி பெறும் நம்பிக்கை இருக்கிறதா...?"**

"நம்பிக்கை இல்லாமல் இப்படியொரு முடிவு எடுப்போமா..? அதே சமயத்தில் தோல்வியைக் கண்டு நாங்கள் அஞ்சவில்லை. தோல்விக்கு பயந்து அரசியலிலிருந்து நல்லவர்கள் விலகியே இருந்தால் இன்பசாகரன்கள் கூட்டம்தான் அதிகரிக்கும். எனவே, நாங்கள் ஜெயித்தால் நாட்டுக்கு நல்ல கதி; தோற்றால் அது நாட்டின் தலைவிதி!

தொகுப்பு : ஸ்ரீநிவாசன்

# என் வயசுல நீங்க எப்படி இருந்தீங்க?

சாதாரணமாக டீன்-ஏஜர்கள், பெற்றோரைப் 'பிரச்னை'யாக நினைப்பது வாடிக்கை. அப்படி இல்லை. அட்வைஸ் அரசர்களான அப்பா, அம்மாக்களையும் சரிக்கட்ட முடியும்! இதோ சில ஐடியாக்கள் :

- உங்களுக்குள்ளு இருக்கும் தனி வட்டத்தில் அப்பப்போ உங்க அப்பா அம்மாவையும் கலந்துக்க விடுங்க. உதாரணமாக நண்பர்களோட அரட்டை அடிக்கும் போது சில சமயம் அவங்களையும் அதிலே சேர்ந்துக்க வைக்கலாம். இதனாலே உங்க பெற்றோரோட 'அனாவசிய பயங்கள்' மறைஞ்சிடும். உங்களுக்கும் தடையில்லாத சுதந்தரம் கிடைக்கும்.
- அவங்களோட ஆலோசனைகளை அடிக்கடி கேளுங்க. எல்லா ஆலோசனைகளையும் அப்படியே கடைப்பிடிக்கணும்னு கட்டாயமில்லே. ஏற்காதவற்றை ஏன் ஏற்கலைன்னு விளக்கிச் சொல்லுங்க. இப்படி ஆலோசனைகளை கேக்கறதாலேயே அவங்களுக்கு உங்ககிட்டே நம்பிக்கை உண்டாகும்.
- "நீ ரொம்ப தொட்டா சிணுங்கியா இருக்கே" என்றோ, "உனக்கு உலகத்தைப் பற்றித் தெரியாது" என்றோ அவங்க விமரிசனம் செய்தால், "எதனாலே, எந்தெந்த நிகழ்ச்சிகளாலே இந்த முடிவுக்கு வந்தீங்க?''ன்னு கேளுங்க. தெளிவு பிறக்கும் - உங்களுக்கு மட்டுமில்லே; தவறான முடிவுக்கு வந்திருந்தால் அவங்களுக்கும்.
- "இவங்களுக்கு என்ன தெரியும்?"னு நினைச்சுக்கிட்டு அப்பா அம்மாகிட்டே எந்த முக்



ஃபாஷன் என்றாலே புதுமைதானே...? அந்தப் புதுமையைப் பிரகடனப்படுத்துவதற்குக் கூடப் புதிய புதிய ஐடியாக்கள் தேவைப்படுகின்றன.

## ஓடும் ரயிலில் ஃபாஷன் ஷோ!



கிய விஷயத்தையோ, உணர்வுகளையோ மறைக்காதீங்க. அவங்களும் இளமைப் பருவத்தைக் கடந்து வந்தவங்கதான். அது மட்டுமில்லே, மேலும், அவங்ககிட்டேயிருந்து நீங்க அதிகம் மறைக்கிறீங்கன்னா, தவறான காரியங்களை நீங்க செய்துக்கிட்டிருக்க வாய்ப்பு அதிகம்.

☯ ஒரு முக்கிய விஷயம். வேறே யார்கிட்டேயும் உங்க அம்மா அப்பாவைப் பற்றித் தவறாக விமரிசிக்காதீர்கள். அப்படிச் செய்தால் உங்களுக்கும் உங்க பெற்றோருக்கும் நடுவிலே இருக்கிற இடைவெளி அதிகமாயிடும்.

☯ ''என் வயசிலே நீங்க எப்படி இருந்தீங்க?''ன்னு அப்பப்போ 'சின்சியரா' கேளுங்க. ''உன்னை விடப் பொறுப்பாகவும், அடக்கமாகவும் தான் நடந்துக்கிட்டோம்''னுதான் பெரும்பாலும் அவங்க சொல்வாங்க. இருந்தாலும் தான் சொல்வது ஓரளவுதான் உண்மைன்றது அவ்ங்க மனத்திலே உறைக்கத்தான் செய்யும். அதற்குப் பிறகு அவங்க உங்களை நடத்தறதிலே ஒரு மாற்றம் நிச்சயம் தெரியும்.

- அருண்சரண்யா

சமீபத்திய சில ஃபாஷன் ஷோ யுக்திகள் :

♦ ரோஹித் பால் என்ற உடையலங்கார நிபுணர், தமது ஃபாஷன் காட்சிகளை சினிமாத் திரையரங்குகளில் நடத்துகிறார்.

♦ டெல்லியைச் சேர்ந்த ப்ரியா கடாரியா என்ற உடை வடிவமைப்பாளர், தமது ஃபாஷன் ஷோவை சதாப்தி எக்ஸ்பிரஸ் ரயிலிலேயே நடத்தினார்!

♦ ஃபாஷன் உலகிற்கு சம்பந்தப்படாத பிரபலங்கள் கூட இப்போது ஃபாஷன் ஷோவுக்கு அழைக்கப்படுகிறார்கள். சமீபத்தில் தில்லியில் ஒரு குறிப்பிட்ட கடைக்கான ஃபாஷன் ஷோவில் தொலைக்காட்சி செய்தி வாசிப்பாளர் ககன்யா பாலகிருஷ்ணன் பங்குபெற்றார்!

♦ மிகக் குறைந்த உடைகளுடன் தோன்ற வைத்து, பார்வையாளர்களுக்கு அதிர்ச்சி ஏற்படுத்துவதும் அதிகரித்து வருகிறது. ஷஹாப் தூரஸி என்ற டிசைனர் ரொம்பவும் பழமைவாதி என்று பெயரெடுத்தவர். அவர் ஏற்பாடு செய்திருந்த ஃபாஷன் ஷோவில் கூடப் பெண்கள் உள்ளாடை இல்லாமல் தோன்ற வைக்கப்பட்டனர்.

♦ கீதாஞ்சலி கஷ்யப் என்ற டிசைனர், எட்டு அடி உயரமுள்ள பொம்மைகளைத் தமது ஃபாஷன் ஷோவுக்குப் பயன்படுத்தத் தொடங்கியிருக்கிறார்.

- ஜி.எஸ்.எஸ்.

நன்றி : சண்டே

## ராம் காஷ்யப் குரூப் நிறுவனங்கள்

Ram Kaashyap
Group



ஆதரவில்

## காமதேனு அறக்கட்டளை

நடத்தும்

# இலக்கியச் சொற்பொழிவு

## கம்பன் கவிச் சோலையில் 5 நாட்கள்

கவிச்சோலைக்கு நம்மை அழைத்துச் சென்று இலக்கிய விருந்தளிப்பவர்
வழக்கறிஞர் இலக்கியச் சுடர் **த. இராமலிங்கம்** பிஎஸ்ஸி., பிஎல்.,

வாரம் ஒரு நாள் இலக்கியப் பொழிவு –
தொடர் சொற்பொழிவு தொடக்க நாள் **16.3.96** சனிக்கிழமை

நேரம் : மாலை 6 மணி முதல் 8 மணி வரை

இடம் : **கலைமாமணி ஜி. உமாபதி அரங்கம்**
(சென்னை ஆனந்த் தியேட்டர் வளாக மாடிப்பூங்கா)

முதல் நிகழ்ச்சியைத் தொடங்கி வைப்பவர் : **திரு. ஏ. நடராசன்**
(நிலைய இயக்குநர், சென்னை தொலைக்காட்சி நிலையம்)

தொடர் சொற்பொழிவு : 16.3.96 அன்று தொடங்கி
ஒவ்வொரு வாரமும் **23.3.96; 30.3.96; 6.4.96; 12.4.96;** ஆக 5 நாட்கள் நடைபெறும்.
ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் முக்கியப் பிரமுகர் ஒருவர் முன்னிலை வகிப்பார்.

16.3.96 அன்று கலைமாமணி ஜி. உமாபதி அரங்கத்தின் பெயர் பலகையைத் திறந்து வைப்பவர் :
டாக்டர் **எஸ்.வி. சிட்டிபாபு**
(முன்னாள் துணைவேந்தர், அண்ணாமலை பல்கலைக் கழகம்)

வரவேற்பு : **திரு உ. கருணாகரன்**
(பங்குதாரர் ஆனந்த் தியேட்டர்)

*தாங்கள் அன்புடன் வருகை தந்து இலக்கிய விழாவைச் சிறப்பிக்க வேண்டுகிறோம்.*

**ஏ. வெங்கட்ரமணி**
(நிர்வாக இயக்குநர்,
ராம் காஷ்யப் நிதி நிறுவனங்கள்)

**கலைமாமணி விக்கிரமன்**
(காமதேனு அறக்கட்டளை)

Insight-1545



சொந்தமாகத் தொழில் தொடங்க ஆசைப்படுகிறவர்களுக்குச் சில ஐடியாக்கள் தருகிறார், அருண் ஐஸ்கிரீம் நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் சந்திர மோகன். சொந்தத் தொழிலில் இனிக்க இனிக்க வெற்றி கண்டவர் இவர்.



• சந்திரமோகன்

# 'வெல்லம்' விருப்பமா?

● நிறைய திட்டமிடுங்கள். தீவிரமாகத் திட்டமிடுங்கள். இதற்கு அதிக காலம் தேவைப்பட்டாலும் தவறில்லை. அப்படித் திட்டமிட்டால் தொழிலில் இறங்கிய பிறகு செயல்முறையில் நிறைய வேகம் காட்ட முடியும். "If you fail to plan, you plan to fail" என்று குறிப்பிடுவதை நினைவு கொள்ளுங்கள்.

● குறிப்பிட்ட தொழிலில் ஆர்வமிருக்கிறது என்பதாலோ, முதலீடு செய்யப் பணமிருக்கிறது என்பதாலோ சிலர் தொழிலை உடனே துவங்கிவிடுகிறார்கள். இவை போதாது. அனுபவம் நிச்சயம் தேவை. இரண்டு மூன்று வருடங்களாவது அதே போன்ற தொழில் நிறுவனமொன்றில் - என்னதான் குறைவான சம்பளம் என்றாலும் - வேலை செய்ய வேண்டும். இல்லாவிட்டால் பின்னாளில் பெரும் தவறுகள் செய்ய நேரலாம்.

● 'மார்க்கெட் சர்வே' மிக அவசியம். குறைந்தபட்சத் தயாரிப்பு எவ்வளவு இருக்க வேண்டும், திடீர் தேவைகள் எப்போது, எவ்வளவு உருவாகும் என்பதையெல்லாம் அறிந்து கொள்ள இது உதவும்.

● சிலர் அரசு அல்லது சம்பந்தமில்லாத வேறு ஏதாவது தனியார் நிறுவனங்களில் வேலை செய்து கொண்டே பகுதி நேரமாகப் புதுத் தொழிலில் ஈடுபடுவதைப் பார்க்கிறேன். இது தற்கொலைக்கு ஒப்பானது. அரைகுறை முடிவுகளை எடுத்துச் சிக்கலில் மாட்டிக் கொள்ளும் வாய்ப்பு அதிகம்.

● கச்சாப் பொருள் கிடைக்கும் இடம் அல்லது விற்பனைக் கூடம் ஆகிய இரண்டில் ஒன்றிற்காவது அருகில் இருக்குமாறு தொழிற்கூடத்தைத் தேர்ந்தெடுங்கள். போக்குவரத்துச் செலவைக் கணிசமாக மிச்சம் பிடிக்கலாம். அரசு சலுகைகளுக்காக மிகவும் பிற்பட்ட இடத்தில் தொழிற்கூடத்தைத் துவக்கினால் ஊழியர்களுக்குப் போக்குவரத்து வசதி ஏற்பாடு செய்வது அவசியம்.

● தயாரிப்புத் தொழில் என்றால் லேத், உதிரி பாகங்கள் கிடைக்குமிடம், ரிப்பேர் செய்யுமிடம் ஆகியவை அருகில் இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

● பீகார், கல்கத்தா - ஏன், தமிழகத்திலேயே தர்மபுரி போன்ற சில பகுதிகளில் தொழிலாளர் போராட்டம் அடிக்கடி வெடிப்பதுண்டு (அவர்கள் விரும்பாவிட்டாலும் மற்ற சக்திகளின் காரணமாக). அடிக்கடிக் 'கொடி தூக்கும்' தொழிலாளிகள் உள்ள பகுதிகளில் தொழிலைத் தொடங்குவதைத் தவிர்த்து விடுவது புத்திசாலித்தனம்.

● வியாபாரம் பெருக, கடனிலும் விற்கலாம். ஆனால் கொடுத்த கடனை வசூலிப்பதில் வேகம் தேவை.

● தொழில் வியாபாரத்தில் யாருக்கேனும் ஏதாவது வாக்களித்தால் அதை எப்பாடுபட்டாவது காப்பாற்ற வேண்டும். கொடுத்த காசோலைக்குச் சமமாக, அளித்த வாக்குறுதியையும் கருத வேண்டும். மற்றவரின் நம்பிக்கையை இழக்கத் தொடங்கிவிட்டால் அதற்குப் பிறகு வெற்றி கிடைப்பது கஷ்டம்.

— குல்லூ

படம் : யோகா

# ஹவாலாவில் நரசிம்மராவ் நாட் அவுட்டா?

• அவுட்? நாட் அவுட்...?



• நியாயமானக் கேட்டவர்



• நிரந்தர நிதியமைச்சர்...?



• மீண்டும் ராஜதந்திரமானால்?



• எப்போது வளர்வார்...?



● **ஆர். முருகானந்தம், எஸ். மாரியூர்.**

**? கிரிக்கெட் ரசிகர்களைப் பற்றி....?**

! அவர்களது உற்சாகக் களியாட்டம் டீ.வி.யில் மாட்ச் பார்ப்பவர்களுக்குக்கூட தொற்றிக் கொள்ளும் அளவுக்கு ஜோராகத்தான் இருக்கிறது. ஆனால், முடிவு நெருங்குகையில் காகிதத்தைக் கொளுத்தி, தீப்பந்தமாக்கும் பேராபத்தான விளையாட்டுதான் பிடிக்கவில்லை.

● **சீதாமகன், மதுரை - 16.**

**? வாடிப்போய், காய்ந்த மாலையுடன் காட்சி தரும் அரசியல் தலைவர்களின் சிலைகளைப் பார்க்கும் போது என்ன நினைப்பீர்கள்?**

! கொள்கைகளைத்தான் வாட விட்டு விட்டார்கள்... வாடிய மாலையையாவது கழற்றிப் போடக் கூடாதா என்று தோன்றும். தலைவர் சிலைக்கு மாலை போடுகிறேன் பேர்வழி என்று சுயவிளம்பரம் தேடிக் கொள்ளும் அற்பபுத்திக்காரர்களை எண்ணி கூடவே கோபமும் வரும்.

● **எஸ். அருள்மொழி, காட்டூர்.**

**? 'ஜெயலலிதாவுக்குக் கடன்பட்டு விட்டேன்; இறுதிவரை நன்றியுடையவனாக இருப்பேன்' என்கிறாரே தன்மானத் தலைவர் வீரமணி....?**

! அந்தப் பட்டத்தைப் போய் இப்போது நீங்கள் நினைவூட்டலாமா...! அவர்தான் அதையெல்லாம் விட்டு விட்டு அம்மாவின் அணுக்கத் தொண்டர் ஆகி வெகு நாட்களாகி விட்டனவே!

● **ஜெ. கண்ணன், சென்னை - 101.**

**? 'சிலரைப் பல நேரம் ஏமாற்றலாம்; பலரைச் சில நேரம் ஏமாற்றலாம்; ஆனால் எல்லோரையும் எல்லா சமயத்திலும் ஏமாற்ற முடியாது' என்கிறாரே 'ஜெ'?**

! வரப் போகிற தேர்தல் முடிவை மனத்தில் கொண்டு அப்படிச் சொன்னாரோ என்னவோ!

● **என். ராஜி, மேலப்பாதி.**

**? அடுத்த பட்ஜெட்டும் நான்தான் தாக்கல் செய்வேன் என்று நிதியமைச்சர் நெடுஞ்செழியன் கூறியிருக்கிறாரே..?**

! எந்தக் கட்சியின் சார்பில் என்று சொல்லவில்லையே...!

● **எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.**

**? 'வேட்பாளர்களின் தேர்தல் செலவுகளை அரசே ஏற்க வேண்டும்' என்ற எதிர்க்கட்சியினரின் ஆலோசனை நடைமுறை சாத்தியமானதுதானா?**

! ஏற்கெனவே பற்றாக்குறை பட்ஜெட்டில் தள்ளாடும் அரசின் தலையில், தேர்தல் செலவு பெரிய பாறாங்கல்லாய் உட்காரும். அதைப் புது வரிகள் வடிவில் மக்களின் தோள்களுக்கு மாற்றி வைக்கும் நமது அரசாங்கம். அப்புறம் தேர்தலைக் கண்டாலே மக்களுக்கு எரிச்சல் வரும்! வேட்பாளர்களின் செலவுகளை நெறிப்படுத்துவது தான் நல்ல தீர்வேயொழிய அதை அரசே ஏற்பது அல்ல!

● **டி.வி.எஸ். பானு, சித்தமல்லி.**

**? 'தேர்தல் நிதி வாங்குகிற கட்சிக்கு ஊழலைப் பற்றிப் பேச என்ன தகுதி இருக்கிறது?' என்று கேட்டுள்ளாரே தி.க. பொதுச் செயலாளர் கி. வீரமணி?**

! நியாயமான கேள்விதான்! பல்வேறு முறைகளைக் கையாண்டு, பல்வேறு வடிவங்களை எடுக்கிற ஊழல்களுக்கு அடிப்படையே தேர்தல் நிதிதான். தேன் எடுத்தவன் புறங்கையை நக்குவது போல, நிதி திரட்டுபவர்கள் சுயலாபமும் அடையத்தான் செய்கிறார்கள்.

● **ஆர். தமிழரசி, மூலக்குப்பம்.**

**? ரேஷன் கடைகளில்**

## நீங்கள் கேட்டவை
**- தராசு**

விற்கப்படும் அரிசி தொடர்ந்து தரக் குறைவாகவும் துர்நாற்றத் துடனும் இருந்து வருகிறதே... இதை எதிர்த்து நுகர்வோர் கோர்ட்டில் வழக்குத் தொடர முடியுமா?

! ரேஷன் அரிசியை விலை கொடுத்துதான் வாங்குகிறோம் (இலவசம் இல்லையே..) என்பதால் தாராளமாகத் தொடரலாம்.

● எஸ். நாகராஜன், மேலப்பாதி.

? இந்திய கிரிக்கெட் அணிக்கு மேலும் வலுவூட்ட என்ன மாற்றம் உடனடித் தேவை...?

! சக்திவாய்ந்த அணிக்கு (ஸ்ரீலங்கா) எதிராக மாற்றம் செய்து பார்த்து மூக்குடைபட்டுப் போயாயிற்று. மீண்டும் ஜிம்பாப்வேக்கு எதிராகப் பழைய அணியே மோதியது. தொடக்க பாட்ஸ்மென் யாராக இருந்தாலும் சரி - நின்று நிலைத்து ஆடுவதுடன் வேகமாகவும் ரன்கள் எடுக்காதவரை ஒரு நாள் பந்தயங்களில் வெற்றி வாய்ப்புக்கள் குறைவு.

● கே.எம். ரவிச்சந்திரன், மதுரை - 20.

? ஊழலில் அ.தி.மு.க. அரசுக்கு நோபல் பரிசே கொடுக்கலாம் என்று ப. சிதம்பரம் கூறியுள்ளாரே....?

! அதற்கும் பக்கம் பக்கமாக விளம்பரம் கொடுத்து, கட் அவுட்கள், விழாக்கள் என்று அமர்க்களப்படுத்தி விடுவார்களே!

● டி. ஜீவா செண்பகவள்ளி, பேர்ணாம்பட்டு.

? தமிழை வளர்க்க வேண்டியது புலவர்களா? கவிஞர்களா? அல்லது முதல்வர்களா?

! தமிழை யாரும் வளர்க்க வேண்டாம். அது தானாக வளரும். வளர வேண்டியது, தமிழால் வாழ்பவர்களின் கண்ணியம்தான். சமீபத்தில் ஒரு தனியார் தொலைக்காட்சி யில் கவிஞர் நா. காமராசனின் பேட்டியைக் காண நேரிட்டது. பிரபஞ்சனை நாலாந்தர எழுத்தாளர் என்று அடாவடியாக வர்ணித்தார். தாம் எழுதப் போகும் காவியம் இன்னும் கொஞ்ச நாளில் வெளியாகும் என்றும் அது வெளியானால் கம்பனும் ஷேக்ஸ்பியரும் காணாமல் போய் விடுவார்கள் என்றும் அவர் மார்தட்டிக் கொண்டதைக் காணச் சகிக்க வில்லை. இத்தகைய அபத்தங்களுக்கெல்லாம் மேடை கிடைக்கிறது என்பதுதான் பெரிய ஆச்சர்யம்.

● க.க.வே. சித்திரவேலு, கருப்பம்புலம்.

? வீரன் அழகு முத்துக்கோன் பெயரில் புதிய போக்குவரத்துக் கழகம் அமையவிருக்கிறதே... அழகுமுத்துக்கோன் என்பவர் யார்?

! மதுரை முத்துக் கிருஷ்ணப்ப நாயக்கரின் (பத்தொன்பதாம் நூற்றாண்டு) திசைக்காவல் தளபதிகளில் ஒருவராக இருந்தவர், வீரர் அழகு முத்துக்கோன். நெல்லைச் சீமையிலுள்ள காட்டாங்குளத்தில் கோட்டை கட்டி வாழ்ந்தார். ஆங்கிலேயரை எதிர்த்ததால் பீரங்கியில் கட்டி வைத்துச் சுட்டுக் கொல்லப்பட்டார். கூடவே இவருடைய துணை தளபதிகள் ஆறுபேரும் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

● காட்டாவூர் இலக்கியன், செங்குன்றம்.

? சட்டப்படிப்பு முடித்தவுடன் ஓராண்டு வழக்கறிஞர்களிடம் பயிற்சி எடுக்க வேண்டும் என்ற ஆணை குறித்து... அதற்கு மாணவர்களின் எதிர்ப்பு குறித்து...?

! புதிய பாடத் திட்டத்தில் இந்தப் பயிற்சி முறை உள்ளடங்கியிருக்கிறது என்பது மாணவர்களின் வாதம். ஆனாலும் சிறந்த வழக்கறிஞர்களிடம் சேர்ந்து சிறிது காலம் பயிற்சி பெறுவது என்பது பல்கலைக்கழகப் பட்டப்படிப்பைவிட பல மடங்கு மதிப்பு மிக்கது; உபயோகமானது.

● ப்ரியா, பாளையங்கோட்டை ❑

? ஹவாலாவில் நரசிம்ம ராவ் மட்டுமே நாட் அவுட்டா....?

! ஹவாலாவினால் ஆதாயம் பெற்றிருக்கக் கூடிய எவரிடமிருந்தும் ஆணைகள் பெற்றுச் செயல்பட வேண்டாம் என்று உச்ச நீதி மன்றம் சி.பி.ஐயை எச்சரித்துள்ளது. எனவே பிரதமர் குற்றவாளியாக இருந்தால் 'அவுட்' ஆகியே தீருவார். இந்த உச்ச நீதி மன்ற உத்தரவானது, பிரதமரின் அதிகாரங்களில் தலையிடுவதாகச் சொல்ல முடியாது. அவர் குற்றவாளி என்று சந்தேகிக்க ஆதாரம் இருப்பின் சி.பி.ஐ தாராளமாக மேற்கொண்டு தொடரலாம் எனப் பச்சைக் கொடி காட்டப் பட்டுள்ளது.

● ஆர். பிரகாஷ், பொன் மலை.

? தொலைக்காட்சியில் அமரர் கல்கியுடைய 'நீதியின் கண்கள்' தொடர் பார்க்கிறீர்களா?

! அமரர் கல்கியின் ஒரு சிறுகதையை மெ.வி. தொடராக உருமாற்றிய வகையில் நாகநந்தி கற்பனை வளமும் நாடகத் திறனும் காட்டுகிறார். நடிக நடிகையரும் சோபிக்கவே செய்கின்றனர். ஆனால், தேவையற்ற, அசடு வழிகிற காமெடி டிராக்கைப் புகுத்தி எல்லாவற்றையும் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி விட்டார்கள்.

● இரா. ரூபன், கோபாலசமுத்திரம்.

? ஜெ. மீண்டும் ஆட்சிக்கு வந்தால்...?

! அறுபத்தைந்து மணி - நாற்பத்தைந்து நிமிட சட்டசபை பேச்சு சாதனையை முறியடித்து, புதிய சாதனை செய்ய வேண்டியிருக்கும். அதே போல், ஆயிரம் கார் பவனி, கட் அவுட்டின் உயரம், ஊழலின் பரிமாணம் முதலியவற்றிலும் புதிய சாதனைகள் நிகழ்த்த வேண்டி வருமே...!

❑ ரூ. 25 பரிசு பெறுபவர்:
ப்ரியா,
4-789, B, 29 வது தெரு,
சாந்தி நகர்,
பாளையங்கோட்டை - 627 002.

# துணை தேட, சில யோசனைகள்

புராதனமான 'பெண்பார்க்கும்' வழக்கம் இன்று மாறிவருகிறது. பாட்டு, பஜ்ஜி, சொஜ்ஜி, விழுந்து வணங்குதல் போன்ற சமாசாரங்கள் மலையேறி விட்டன. ஆணும் பெண்ணும் தனியாகப் பேசி முடிவெடுக்கிற அளவுக்கு வெகு நல்ல முன்னேற்றம்.

"பெண்களின் அப்பாக்களே, 'நீயும் உனக்காகப் பார்த்திருக்கும் பையனும் அந்த ஓட்டலுக்குப் போய் இன்னிக்கு சாயந்திரம் சாப்பிட்டுட்டே பேசுங்க. அல்லது பீச்சுக்குப் போய்ட்டு வாங்க. ரெண்டவர் கழிச்சி நான் வந்து பிக்-அப் பண்ணிக்கறேன்' என்று சொன்னால் தப்பில்லை!" என்கிறார் மனவியல் மருத்துவரும் திருமண ஆலோசகருமான டாக்டர் விஜயகுமார்.

அங்ஙனம் தனியாகப் பேசப் போகையில் என்ன பேசுவது? எப்படித் தொடங்குவது? அவரே தரும் சில ஐடியாக்கள் இங்கே-

• "மனைவி என்பவள் எப்படி இருக்க வேணும் என்பது உங்கள் கற்பனை?" என்று பெண் முதலில் கேட்டுவிட வேண்டும். இதிலிருந்து, எதெதற்கு ஆண் முக்கியத்துவம் தருகிறான் என்பதைத் தெரிந்து கொண்டு விடலாம். அவன் மரபுகளில் பிடிப்பு கொண்டவனா? நவீன சிந்தனை உள்ளவனா? எந்த அளவுக்குத் தம் வருங்கால மனைவியின் உணர்வுகளுக்கு முக்கியத்துவம் தருவான் என்பது போன்ற கேள்விகளுக்கு விடை கிடைக்கும். ஆண்களும் 'கணவனைப் பற்றிய உன் எதிர்பார்ப்பு என்ன' என்று கேட்டு விட்டால் தீர்ந்தது பிரச்னை!

• வேலைக்குப் போகிற பெண்கள், திருமணத்துக்குப் பின், வேலையை விட விரும்பாத பட்சத்தில் அதை இச் சந்திப்பிலேயே தெளிவாகச் சொல்லி விடுவதன் மூலம் பின்னால் பிரச்னைகளைத் தவிர்க்கலாம். மட்டுமல்ல; தம் லட்சியங்களையும் அதை நோக்கியத் தம் முயற்சிகளையும் கூடச் சொல்லி விட வேண்டும்.

• திருமணத்துக்குப்பிறகு, 'என் அம்மாவை நீ கவனித்துக் கொள்வாய் என்று எதிர்பார்த்துத்தான் கல்யாணத்துக்கே சம்மதித்தேன்' என்றோ, 'நல்ல சமையல் செய்யத் தெரியும் என்று நினைத்தேன்' என்றோ கணவன் கூறுவதும், அதற்கு, 'அப்போ ஒரு நர்ஸையோ சமையல்காரியையோ பண்ணிட்டிருக்க வேண்டியதுதானே' என்று மனைவி சீறுவதும் பல வீடுகளில் நடக்கிற விஷயம். இதுபோன்ற எதிர்பார்ப்புகளையெல்லாம் முன்பே பேசிவிடுவது நலம்.

• 'திருமணமான சில வருடங்களுக்காவது குழந்தை வேண்டாம்' என்று நினைத்தால் அதையும் சூசகமாகத் தெரிவித்து விட வேண்டும்- தக்க காரணங்களுடன்! (வேலை மாற்றல் வாய்ப்பு, கலைஞராயிருந்தால் உடலுக்குத் தர வேண்டிய முக்கியத்துவம் இன்னபிற)

• ரொம்ப முக்கியம்- இருவருமே முன் கோபக்காரர்களா என்று தெரிந்து கொள்ள வேண்டியது. யாராவது ஒருத்தருக்கு விட்டுக் கொடுக்கும் சுபாவம் இல்லாத பட்சத்தில் சிக்கல்தான்!

• ஆண்/பெண் யாருக்கும் இளம் வயதில் 'சலனச் சம்பவங்கள்' ஏதும் நடந்திருந்தால் அவை நடந்தவையாகவே இருக்கட்டும். 'ரொம்ப வெளிப்படை'யாகப் பேசுவதாக நினைத்து உளறிக் கொட்டி விட வேண்டாம்- அது மேலும் தொடராத பட்சத்தில்! பழைய காதல் நினைவுகள் இன்னும் தொடருமானால் அதை வெளிப்படையாகச் சொல்லி விடுவது நல்லது. பின்னால் இருவருக்கும் பிரச்னை வராது பாருங்கள்!

• இதெல்லாம் சரி, மேலே குறிப்பிட்ட அடிப்படையான விஷயங்களில் வேறுபாடு தோன்றினால் பிரிவதா? அப்படியானால் எப்படிப் பிரிவது?

முதல் மதிப்பீடே மனதுக்குக் கசப்பளிக்கிறது என்றால், தொடர்பைத் துண்டித்துக் கொள்வதே நல்லது. "நமது அடிப்படை ரசனைகளும், கருத்துகளும் ரொம்ப வித்தியாசப்படுகின்றனவே" என்பது போல் நாகரிகமாகக் குறிப்பிடலாம். மற்றவற்றை (அதாவது அந்த வரனை நாசூக்காகக் கத்தரிக்கும் வேலையை) பெற்றோரிடம் விட்டு விடலாம்!

தொகுப்பு :
**ஜிஎஸ்எஸ்.**





# பெஸ்ட் பெனிபிட் பண்ட் லிமிடெட்

(மத்திய சர்க்காரால் இந்திய கம்பெனிகள் சட்டம் 1956-ன் கீழ் பதிவு செய்யப்பட்டது)

தலைமை காரியாலயம் :

**3வது மாடி, சாந்தி காம்ப்ளெக்ஸ், 26, ரங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை - 17.**

நங்கநல்லூர் கிளை : 13, கல்லூரி சாலை, சென்னை - 114.
BM : P. தியாகராஜன், மாஜி கிரைண்ட்லேஸ் பாங்க்.

குரோம்பேட்டை கிளை : 5, 2வது பிரதான சாலை, நியூ காலனி, சென்னை - 44.
BM : S. இராஜகோபால், M.Sc., CAIIB, மாஜி இந்தியன் பேங்க்.

தாம்பரம் சானடோரியம் கிளை : 7, ஸ்டேஷன் ரோடு, சென்னை - 47.
BM : R. V. இராமமூர்த்தி, மாஜி கிரைண்ட்லேஸ் பாங்க்.

**1. குறுகிய கால டெபாசிட் திட்டம் :**
*30 நாட்கள் - 18% 45 நாட்கள் - 19%*

**2. பென்ஷனர்/பொதுஜன பாதுகாப்புத் திட்டம் :**
*1 வருடம் - 22%; 2 வருடம் - 23%; 3 வருடம் - 24%*

**3. அதிகபட்ச வருவாய் திட்டம்/சுமங்கலி கல்யாணத் திட்டம் :**

| | முடிவில் கிடைக்கும் தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| டெபாசிட் தொகை | 12 மாதம் | 24 மாதம் | 36 மாதம் | 40 மாதம் | 60 மாதம் |
| ரூ. 1,000 | ரூ. 1,240 | ரூ. 1,533 | ரூ. 1,880 | ரூ. 2,000 | ரூ. 3,000 |
| ரூ. 5,000 | ரூ. 6,200 | ரூ. 7,655 | ரூ. 9,400 | ரூ. 10,000 | ரூ. 15,000 |

**4. குழந்தைகள் எதிர்கால பாதுகாப்பு திட்டம்/பெஸ்ட் பாண்ட் ஸ்கீம் :**
*ரூ. 1,000 பத்து வருடங்களில் ரூ. 10,740 ஆகும். 15 வருடங்களில் ரூ. 35,250 ஆகும்.*

**5. முன் கூட்டிய வருவாய் திட்டம் :**
*டெபாசிட் காலத்திற்கான முழு வட்டியும், டெபாசிட் செய்யும் தேதியன்றே தரப்படும். 1 வருடம் 18%.*

**6. தாத்தாவின் பரிசுத் திட்டம் :**
*ரூ. 1,000 15 வருடங்களில் ரூ. 35,250 ஆகும். 10 வருடங்களில் ரூ. 10,740 ஆகும்.*

**7. சேவிங்ஸ் பேங்க் : 14%**

***BBF — THE CUSTOMER CONSCIOUS MAHASAKTHI***
***BBF — THE CUSTOMER FRIENDLY MAHABANK***

V. VIVEKANAND B.Com (Distn),
MBA (Distn), CAIIB (All India First),
IAS (Topper).
CHAIRMAN

Dr. PARAMESWARI,
M.B.B.S.

VICE CHAIRMAN

